

# கல்கி பொருளடக்கம்


மலர் 11 இதழ் 25 | 1952 ஜனவரி 20 | கர ௵ தை 7




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



கல்கி

மலர் 11 } தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
நாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் } இதழ் 25

# பிரதம தந்திரியின் யாத்திரை

இரண்டு மாதங்களுக்கு முன் பிரிட்டனில் நடந்த பொதுத் தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சியினர் வெற்றி பெற்றார்கள் அல்லவா? அப்போது சர்ச்சில் மந்திரி சபை ஏற்பட்டதைக் கண்டு சர்ச்சிலின் பக்தர்கள் பரவசம் அடைந்தனர்.

அவர்களில் ஒரு பிரமுகர், "சர்ச்சில் பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு மாத்திரம் பிரதம மந்திரி அல்ல, ஐரோப்பிய நாடுகளில் உள்ள மந்திரிகளுக் கெல்லாம் பிரதம மந்திரியாக இருக்கும் பேராற்றல் படைத்தவர்" என்று மகிழ்ச்சி அடைந்தார்.

இப்போதோ ஸ்ரீ சர்ச்சில் ஐரோப்பாவில் மாத்திரம் அல்ல, அகில உலகிலும் உள்ள ராஜதந்திரிகளுக்கெல்லாம் பிரதம தந்திரியாக இருக்கும் திறமை தமக்கு உண்டு என்பதைக் காட்டி வருகிறார்!

பிரிட்டனில் தொழிற்கட்சி சர்க்கார் அதிகாரத்தில் இருந்த போது, பிரிட்டனை யுத்த மேகங்கள் சூழ்ந்து கொண்டிருப்பதாயும், அப்படியிருந்தும் பிரிட்டிஷ் இராணுவ பலத்தைத் தொழிற்கட்சி சர்க்கார் பெருக்கவில்லை என்றும் சர்ச்சில் குற்றம் சாட்டினார். பிரிட்டன் எவ்விஷயத்திலும் பிறநாடுகளுக்குப் பணிந்து போகும்படி தொழிற்கட்சி சர்க்கார் செய்து விட்டார்கள் என்றும், பிரிட்டன் மூன்றாம்தர வல்லரசாகி விட்டது என்றும் அங்கலாய்த்தார்.

சர்ச்சில் கோஷ்டியினரின் அத்தகைய தேர்தல் பிரசாரத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று ஆட்லி சர்க்கார் கருதினர். உடனே பிரிட்டிஷ் இராணுவ பலத்தைப் பெருக்குவதற்காக நானூற்றெழுபது கோடி பவுன் செலவில் ஒரு திட்டத்தைத் தயாரித்து அதைப் பார்லிமெண்டில் நிறைவேற்றினர்.

அதனால் அவ்விஷயமாகக் கன்சர்வேடிவ் கட்சிப் பிரசாரத்தின் பலம் குன்றியதெனினும், மற்றொரு விபரீதம் ஏற்பட்டது.

அதாவது இராணுவப் பெருக்கத்துக்காக அவ்வளவு அதிகத் தொகை செலவு செய்தால் பிரிட்டன் பாப்பராகிவிடும் என்று கூறிப் பிரிட்டிஷ் மந்திரிகளில் ஒருவரான பிவானும் மற்றும் அவரைச் சேர்ந்த சிலரும் தொழிற்கட்சியிலிருந்து பிய்த்துக் கொண்டு வெளியேறி விட்டார்கள்.

சர்ச்சில் கோஷ்டியினர் அதிகாரத்திற்கு வந்த பின் இராணுவ பலத்தைப் பெருக்குவதற்காக நானூற்றெழுபது கோடி பவுன் செலவினத்தைச் சமீப காலத்தில் அமுலுக்குக் கொண்டு வரப் போவதில்லை என்று கூறி விட்டனர்.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? தொழிற்கட்சி சர்க்கார் மீது கன்சர்வேடிவ் கட்சியினர் கூறிய புகார் வெறும் தேர்தல் பிரசார தந்திரமேயன்றி வேறல்ல என்பது தெரியவில்லையா!

அது போலவே, இந்தியா, பர்மா முதலிய நாடுகளுக்குச் சுதந்திரம் அளித்ததற்காகத் தொழிற்கட்சி சர்க்காரைக் கண்டித்த சர்ச்சில் கோஷ்டியினர், அதிகாரத்துக்கு வந்த உடனே முதல் காரியமாகச் சூடான் தேசத்துக்குச் சுதந்திரம் அளிக்க முன் வந்திருக்கின்றனர்! சூடான் மக்கள் மீதுள்ள அன்பினால் அல்ல, அடுத்துள்ள எகிப்துக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்பதற்காகத்தான்!

* * * *

மத்திய கேந்திரப் பிரதேசத்தில் உள்ள சிறிய நாடுகள் பிரிட்டனை மிரட்டும்படி நேர்ந்ததற்காக முன்பு சர்ச்சில் கோஷ்டியினர் தொழிற்கட்சி சர்க்காரைக் கண்டித்தார்கள். ஆனால் அவர்கள் அதிகாரத்துக்கு வந்த பின்னர் ஈரான், எகிப்து நாடுகளில் பிரிட்டிஷாரின் நிலைமை இன்னும் மூழுமோசமாகி விட்டது.

ஈரானில் உள்ள பிரிட்டிஷ் ஸ்தானிகர் காரியாலயங்களையெல்லாம் மூடிவிட வேண்டும் என்று ஈரான் சர்க்கார் கண்டிப்பாக உத்தர விட்டிருக்கின்றனர். எகிப்திலோ

# தேர்தல் துணுக்குகள்!









பிரிட்டிஷாருக்கும் எகிப்தியர்களுக்கும் ஒரு குட்டி யுத்தமே நடந்து வருகிறது!

அந்தப் பிரச்னைகளை ஒட்டித் தங்களுக்கு உதவி புரியும்படி கேட்டுக் கொள்ளவே இப்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியும் அகில உலகப் பிரதம தந்திரியுமான வின்ஸ்டன் சர்ச்சில் அமெரிக்காவுக்கு யாத்திரை சென்றிருக்கிறார்.

''என்னுடைய அமெரிக்க யாத்திரையை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக நான் கருதவில்லை'' என்று சர்ச்சில் அமெரிக்காவுக்குப் புறப்படு முன் பிரிட்டிஷ் மக்களிடம் கூறினார்.

ஆனால் அவரது கூற்றுக்கும் உண்மைக்கும் சிறிதும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை!

சர்ச்சில் அமெரிக்காவுக்குப் புறப்படுமுன் லண்டனில் பல இரவுகளாக பிரிட்டிஷ் மந்திரி சபைக் கூட்டம் நடந்தது. பிரிட்டிஷ் இராணுவத் தலைவர்களும், அணுகுண்டு ஆராய்ச்சியாளர்களும் பிரிட்டிஷ் பொருளாதார நிபுணர்களும், அந்த மந்திராலோசனையில் கலந்து கொண்டார்கள்.

பிரிட்டிஷ் மந்திரிகள், ஆலோசகர்கள், இராணுவத்தின் பிரதம நிர்வாகிகள் உள்பட முப்பத்தைந்து பிரமுகர்களுக்கு மேல் சர்ச்சிலுடன் அமெரிக்காவுக்குச் சென்றிருக்கிறார்கள்.

அப்படியிருக்க, சர்ச்சிலின் அமெரிக்க யாத்திரை சிறிதும் முக்கியத்துவம் வாய்ந்ததல்ல என்று கூறுவதை யாராவது நம்ப முடியுமா!

இப்போது பல முக்கியப் பிரச்னைகள் விஷயத்திலும் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் அப்பிராய பேதம் இருந்து வருகிறது.

உதாரணமாக, பிரிட்டன் சீனக் குடியரசு சர்க்காரை அங்கீகரித்திருக்கிறது; அமெரிக்கா அங்கீகரிக்கவில்லை.

ஈரான், எகிப்து விவகாரங்களில் தீவிரமான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்பது பிரிட்டிஷ் சர்க்காரின் அபிப்பிராயம். ஆனால், அந்த நாடுகளுடன் பிரிட்டன் சமரசமாகப் போக வேண்டும் என்று அமெரிக்கா வற்புறுத்துகிறது.

அமெரிக்கா மேற்படி அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளாத வரையில், மத்திய கேந்திர நாடுகள் விஷயத்தில் பிரிட்டன் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள முடியாது. அந்த நாடுகளுடன் பணிந்து போகும்படியே நேரும்.

சர்ச்சிலின் அமெரிக்க யாத்திரை ஒரு விஷயத்தில் உடனடியாகப் பலனைக் கொடுத்திருக்கிறது. பிரிட்டனுக்கு உடனே முப்பது கோடி டாலர் உதவி அளிக்க அமெரிக்கா இசைந்திருக்கிறதாம்.

ஆனால் முக்கியமாக மத்திய கேந்திர நாடுகளில் பிரிட்டனுக்கு ஏற்பட்டுள்ள சங்கடங்கள்தான் இன்று பிரிட்டனை எதிர்நோக்கி நிற்கும் மகத்தான பிரச்னையாக இருந்து வருகிறது. அந்தப் பிரச்னை தீருவதற்கு மேற்படி யாத்திரையின் பலனாக வழி பிறக்குமா!

சர்ச்சிலின் ராஜ தந்திர வெற்றியோ அல்லது தோல்வியோ அதைத்தான் பொறுத்திருக்கிறது.

# இராசபாளையத்தின் தோல்வி

சென்னை மாகாணத்திற்கு இரண்டு வருஷ காலமாகப் பிரதம மந்திரியா யிருந்து வரும் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள் அவருடைய சொந்த ஊராகிய இராசபாளையம் ஸ்ரீ வில்லிபுத்தூர் தொகுதியில் தேர்தலில் தோற்றுப் போனார். இது உண்மையில் கனம் குமாரசாமி ராஜாவின் தோல்வி அன்று; இராசபாளையம் தொகுதியின் தோல்வியே யாகும்.

சென்ற இருபத் தைந்து ஆண்டு காலமாகக் கனம் குமாரசாமி ராஜா இராசபாளையத்துக்குத் தொண்டு செய்து வந்திருக்கிறார். இராசபாளையத்துக்குப் பெயரும் புகழும் அளித்திருக்கிறார். இராசபாளையத்தில் அவர் நடத்திய தமிழ் மாகாண மகாநாட்டுக்குச் சென்று பார்த்தவர்கள், இன்னும் அந்த வைபவத்தை மறந்திருக்க மாட்டார்கள்.

கனம் குமாரசாமி ராஜா தேச விடுதலைப்போரின் முன்னணியில் நின்று சிறை புகுந்து பல கஷ்டங்களை அநுபவித்தவர்.

பொது வாழ்வில் ஈடுபட்டதிலிருந்து கனம் குமாரசாமி ராஜா தமக்குக் கிடைத்திருந்த பரம்பரைச் சொத்துக்களில் பெரும் பகுதியை இழந்திருக்கிறாரே தவிர, எவ்வித சுய லாபத்தையும் அடைந்துவிட வில்லை. இது இராசபாளையம் வாசிகளுக்கும் அக்கம் பக்கத்து மக்களுக்கும் நன்றாய்த் தெரியும்.

சென்ற ஐந்து ஆண்டு காலத்தில் சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரி பதவி வகித்தவர்களுக்குள்ளே கனம் ராஜா மற்றவர்களுக்கு எந்த விதத்திலும் பின் வாங்கிவிட வில்லை.

அரசாங்க நிர்வாகத்தைப் பாரபட்ச மில்லாமலும் திறமையாகவும் நடத்தி வந்திருக்கிறார். அவருடைய நிர்வாகத்தில் ஊழல்கள் குறைந்திருக்கின்றன. பொது மக்களின் புகார்களை அவ்வப்போது கவனித்துக் கூடிய பரிகாரங்களைச் செய்து வந்திருக்கிறார்.

இன்னும் பிரமாதமான காரியங்களைச் செய்ய முடியவில்லையென்றால், அதற்கு இந்த மாகாணத்தின் ஐந்து வருஷத்து அரசியல் பரம்பரையும், பல வருஷங்களாக மழையில்லாமல் போன துரதிர்ஷ்ட நிலைமையுமே காரணமே தவிர, கனம் குமாரசாமி ராஜா காரணம் இல்லை. எனினும் அந்த துரதிர்ஷ்ட நிலைமையிலும் இம் மாகாணத்தின் நன்மைக்குரிய திட்டங்களை வகுத்து நடத்தப் பிரயத்தனங்களைத் தொடங்கி வைத்திருக்கிறார்.

அத்தகையவர் இந்தப் பொதுத் தேர்தலில் தோற்றுப் போனது பற்றித் தமிழ் மக்கள் வருந்துவார்கள். "இராசபாளையமே! உனக்கு என்ன வந்து விட்டது! உன்னுடைய நல்ல பெயருக்கு இத்தகைய மாசு உண்டாக்கிக் கொண்டாயே!" என்றும் கேட்பார்கள்.

* * *

அரசியல் வாழ்வில் இத்தகைய ஏற்றத் தாழ்வுகள் இயல்பு. காரணம் சொல்ல முடியாத குருட்

## ஆந்திர தேசத்திலே!




"ஆந்திராவில் கம்யூனிஸ்டுகளுக்குப் பெருவாரியான ஸ்தானங்கள் கிடைத்திருக்கின்றன."

# புதிய யுக்தி!




பல மாதங்களாகப் புகைந்து வரும் ஆங்கிலோ — எகிப்து தகராறைத் தீர்க்கப் பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு புதிய முறையைக் கைக்கொள்ள உத்தேசித்திருக்கின்றனர்.

---

டாம் போக்கான வெற்றிகளையும் தோல்விகளையும் சரித்திரம் கண்டதுண்டு.

இங்கிலாந்தில் அகில உலகப் புகழ் பெற்றிருந்த முதன் மந்திரி வில்லியம் கிளாட்ஸ்டன் ஒரு சமயம் அவருடைய சொந்தத் தொகுதியில் தேர்தலுக்கு நின்று தோற்றுப் போனார். அதனால் அவருக்கு எத்தகைய குறைவும் ஏற்பட்டு விடவில்லை.

அரசியல் வாழ்வின் இயல்பை நன்கு அறிந்தவர் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா. இந்தப் பிரதம மந்திரி பதவி அவர் எதிர்பார்த்துக் கிடைக்கவில்லை. தானாகவே அவரைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தது. ஆகையால் கனம் குமாரசாமி ராஜா இந்தத் தோல்வியைப் பொருட்படுத்த மாட்டார். மகாத்மா காந்தியின் தலைமையில் தொண்டு செய்யும் பாக்கியம் பெற்றவர்கள் வெற்றி - தோல்விகளை ஒன்றாகக் கருதும் மனோ நிலை பெற்றிருப்பார்கள்.

ஆனால் இராசபாளையம்' தொகுதிக்கு இதனால் ஏற்பட்ட குறை தீர்வது எளிதல்ல.

கனம் குமாரசாமி ராஜாவுடன் போட்டியிட்டு வெற்றி பெற்றிருப்பவரைப் பற்றிச் சொந்த முறையில் நாம் குறை எதுவும் சொல்ல முடியாது. ஆனால் அவர் எந்த அரசியல் கட்சியின் சார்பாகவும் தேர்தலுக்கு நிற்கவில்லை. காங்கிரஸை எதிர்த்த கூட்டத்தார் அனைவரும் அவரை ஆதரித்திருப்பதாகத் தெரிகிறது. கம்யூனிஸ்டுகளும், சோஷலிஸ்டுகளும், கறுப்புச் சட்டைக்காரர்களும், மற்றும் காங்கிரஸிடம் அதிருப்தி கொண்டவர்களும் கூட்டுச் சேர்ந்து ஆதரித்தபடியினால் அவர் வெற்றி பெற்றிருப்பதாகத் தெரிகிறது.

"கிடைத்த தடியைக் கொண்டு காங்கிரஸைக் கொல்லு!" என்ற உபதேசத்தை இராஜபாளையம் தொகுதி கடைப்பிடித்திருக்கிறது. ஆனால் அந்த நோக்கம் நிறைவேறாது என்பது நிச்சயம். காங்கிரஸின் உயிர் ஒன்று அல்ல; ஓரிடத்தில் அல்ல; காங்கிரஸுக்கு ஆயிரம் பதினாயிரம் லட்சக் கணக்கில் உயிர்கள் தேசமெங்கும் உண்டு. தேச பக்தர்களின் தியாக வெள்ளியில் பிறந்து வளர்ந்தது காங்கிரஸ். அதை அழிக்க முடியாது.

* *

கனம் குமாரசாமி ராஜா தம்முடன் போலீஸ்காரர்களை அழைத்துப் போய் ஜனங்களைப் பயமுறுத்தி வோட்டு வாங்குவதாகக் காங்கிரஸின் விரோதிகள் பிரசாரம் செய்தார்கள். அது எவ்வளவு பொய் என்பதை இத் தேர்தல் முடிவு நிரூபிக்கிறது. கனம் குமாரசாமி ராஜா 118 வோட்டுக்களினால் தோல்வியுற்றார். தம்முடைய பிரதம மந்திரி பதவியின் செல்வாக்கை எந்த விதத்திலாவது உபயோகித்திருந்தால் 118 அதிக வோட்டுக்களை அவர் பெற்றிருக்க முடியாதா!

புதுச்சேரி முதலிய இடங்களில் எதிர்க் கட்சிக்காரர்கள் தேர்தலுக்கு நிற்பதற்கே முடியாமல் பயங்கரத்துக்கு உள்ளாக்கப்படுவதாக அறிகிறோம். அங்கே அதிகாரத்தில் உள்ளவர்கள் அவ்விதம் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

கனம் குமாரசாமி ராஜா தாம் பிரதம மந்திரி என்பதை அடியோடு மறந்து இக் காட்டுப் பிரஜை

களிலே தாமும் ஒரு சாதாரண பிரஜையாக நின்றுதான் தேர்தலில் போட்டியிட்டார்.

காங்கிரஸின் விரோத சக்திகள் பல சேர்ந்து அவரைச் சில வோட்டுக்களினால் தோற்கடித்தன.

இராசபாளையம் 'வேண்டாம்' என்று கூறி விட்ட கனம் குமாரசாமி ராஜாவின் சேவையை விரும்பி வரவேற்பதற்குத் தமிழ் நாட்டில் பல இடங்கள் சித்தமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

# குமரி முனையில் தமிழர் வெற்றி!

சென்னை மாநகரம் தமிழர்களுக்குச் சொந்தமானது என்ற தெளிவான விஷயத்தை ஸ்தாபிப்பதற்குத் தமிழர்கள் எவ்வளவு பாடு படவேண்டியிருந்தது! அதுபோலவே திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள தமிழர்களின் பிரதேசம் தமிழ் நாட்டைச் சேரவேண்டும் என்பதை ஸ்தாபிப்பதற்காகத் திருவாங்கூர்த் தமிழர்கள் படாதபாடு பட்டார்கள்; அதற்காக மாதக் கணக்கில் சத்தியாக்கிரகப் போர் நடத்தினார்கள்; சமஸ்தான போலீஸின் தடியடிக்கும் இலக்கானார்கள்; காங்கிரஸ் மேலிடத்துக்குத் தூது சென்ற வண்ணமாக இருந்தார்கள்; இறுதியில் காங்கிரஸ் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டுத் தங்களுடைய கிளர்ச்சியை நிறுத்திக் கொண்டார்கள்.

எனினும் அவர்களுடைய விடா முயற்சி இப்போது மகத்தான பலனைக் கொடுத்திருக்கிறது. அதாவது அந்தப் பிரதேசத்தில் உள்ள மக்கள் 'தமிழர்களின் பிரதேசம் தமிழ் நாட்டைச் சேர வேண்டும்' என்னும் கோரிக்கையைப் பரிபூரணமாக ஆதரிக்கின்றனர் என்பது இந்தத் தேர்தலில் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றி வியக்தமாகி விட்டது.

திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் நிறுத்திய அபேட்சகர்களில் மிகப் பெரும்பாலோர் எழுபது, எண்பது சதவிகிதத்துக்கு மேல் வாக்குகள் பெற்று அமோகமான வெற்றி அடைந்துள்ளனர்.

திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரான ஸ்ரீ ஏ. நேசமணி மக்கள் சபைக்கு நின்று மற்றவர்களைக் காட்டிலும் எழுபதாயிரத்துக்கு மேற்பட்ட வாக்குகள் பெற்று வெற்றி பெற்றுள்ளார். திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் சார்பில் ராஜ்ய சபைக்கு நின்ற ஜனாப் நூர் முகமது, ஸ்ரீ பொன்னப்ப நாடார், ஸ்ரீ பி. ராமசாமிப் பிள்ளை முதலியவர்களும் பெருவாரியான வாக்குகள் அதிகமாகப் பெற்று வெற்றியடைந்தனர். இதிலிருந்து திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸின் லட்சியத்தை ஜனங்கள் அமோகமாக ஆதரிக்கிறார்கள் என்பது நன்கு தெரிகிறது அல்லவா!

திருவாங்கூரைச் சேர்ந்த தமிழ்ப் பிரதேசங்கள் தமிழ் நாட்டுடன் சேரவேண்டும் என்ற கொள்கையைத் தவிர, மற்ற விஷயங்களில் இவர்களுக்குக் காங்கிரசுடன் யாதொரு கருத்து வேற்றுமையும் இல்லை. எனவே, இவர்கள் மற்ற எல்லா விஷயங்களிலும் திருவிதாங்கூர் காங்கிரசுடன் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். திருவாங்கூர் தமிழர்களுடைய இலட்சியம் வெற்றி பெறுவதற்குக் காங்கிரசை ஆதரித்து நிற்பது ஒன்றுதான் சிறந்த வழி என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.




## அட்டைப்பட விளக்கம்

நடனம் ஆடினார்—வெகு
நாகரிகமாகவே நடனம் ஆடினார். —கோபால கிருஷ்ண பாரதியார்

**யார்!** நாகரிகமாக நடனம் ஆடியது யார்! சிதம்பரத்தில் எழுந்தருளியிருக்கும் நடராஜப் பெருமான்தான். [எல்லா உயிர்களுக்குள்ளும் ''வாராதே வரவல்ல;'' இறைவன் தான்!

அவனுடைய நடனத்தில் பல்கோடி உயிர்கள் ஜனிக்கின்றன; காப்பாற்றப்படுகின்றன, அழிக்கவும் படுகின்றன. உயிர்கள் மட்டுமா! அண்டங்கள், கோளங்கள், நட்சத்திரங்கள், சூரியர்கள், சந்திரர்கள்—இன்னும் எத்தனை எத்தனையோ அவனுடைய நடனத்தின் கதிக்கு ஏற்ப உழன்று சுழன்று வருகின்றன. ஆயினும் முத்து மாலையின் ஊடே ஒரு முத்தையும் இன்னொரு முத்தையும் பிணைத்து நிற்கும் கம்பியைப் போல் ஆண்டவனின் நடனத்திலும் ஒரு தாளம்—ஒரு நியதி நிலவுகிறது! இது என்ன விந்தை! எவ்வளவு நாகரிகமான நடனம் என்று வியக்கிறார் கவிஞர்!

''கலை என்பதே ஆண்டவனைப் பார்த்துச் செய்தல்'' என்றார் ஒரு அறிஞர். அதாவது ஈசுவர சிருஷ்டியில் இல்லாததைக் கலைஞன் செய்துவிட முடியாது! கலைஞன் செய்து விட்டாலும் அது ஏற்கெனவே வேறு எங்கேயோ ஓர் இடத்தில் இருக்கும். ஆகவே தான் ஆண்டவனுடைய நடனத்தை நமது நாட்டில் பெண்களுக்குக் கற்பித்தார்கள்.

இந்த இதழ் அட்டைப்படச் சித்திரத்தில் அபிநயம் பிடிக்கும் பெண், ''நடனம் ஆடினார்'' பாட்டில் ஒரு நிலையைத் தான் உணர்த்துகிறாள்!

பரத நாட்டியக் கலை முற்றும் துறந்த பரத முனிவரால் வகுக்கப்பட்டது. அவனை எப்பொழுதும் தியானிக்கும் பக்திமானால் சிருஷ்டிக்கப் பட்டது! அவனை வழிபடுவதற்காகவே சாஸ்திரம் செய்யப்பட்டது!

அத்தகைய அபூர்வ கலை சிறிது காலத்துக்கு முன்வரை அலட்சியப்படுத்தப் பட்டாலும், இப்பொழுது அக்கலை புத்துயிர் பெற்று வருகிறது! விரைவிலேயே பரத நாட்டியம் பூர்வத்தில் எட்டிப் பிடித்த லக்ஷ்யத்தை, பரத முனிவர் மனத்தில் கொண்ட குறிக்கோளை அடைந்துவிடும் என்பதற்கான சுப சகுனங்கள் ஏற்பட்டு வருகின்றன! வாழ்க பரத கலை!

# பொன்னியின் செல்வன்



## இரண்டாம் அத்தியாயம்

## மோக வலை

**வ**யது முதிர்ந்த பிறகு இளம் பெண்களை மணந்து கொள்வோர் எப்போதும் சந்தேகம் என்னும் மாயா உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அன்னியர்கள் யாரைக் கண்டாலும் இயற்கையான அருவருப்பு ஏற்படுகிறது. பழுவேட்டரையருக்கு இத்தகைய அருவருப்பு ஏற்பட அதிக காரணம் இருந்தது. நந்தினி தமக்கு முன்னால் வந்து நின்று பேசத் தொடங்கியதை அவர் சிறிதும் விரும்பவில்லை. அதே சமயத்தில் நந்தினியைக் கடிந்து கொள்ளவும் அவரால் முடியவில்லை.

எனவே நந்தினி கேட்ட கேள்விக்கு மறுமொழியாக, "ராணி! இந்த உலகத்தில் நமக்குத் தெரியாதவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எல்லாரையும் நாம் பார்த்து அறிந்திருக்க முடியாதல்லவா? அதனால் நமக்கு நஷ்டமும் இல்லை!" என்றார்.

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன், "ஐயா! சோழ நாட்டின் பொக்கிஷ மன்னரின் பட்டமகிஷிக்கு என்னைத் தெரியாததினால் நஷ்டம் ஒன்றுமில்லை; நஷ்டம் எனக்குத்தான். ஆகையால் என்னை நானே தெரிவித்துக் கொள்கிறேன். அம்மணி! என்னைப் பார்த்திபேந்திரப் பல்லவன் என்று அழைப்பார்கள்!" என்று சொன்னான்.

"ஓ! அப்படியா? தங்கள் பெயரை நான் கேள்விப் பட்டிருக்கிறேன்!" என்றாள் நந்தினி.

"பார்த்திபேந்திரா! ஏன் விருதுகளை விட்டு விட்டுப் பெயரை மட்டும் சொல்லிக் கொண்டாய்? இவ்வளவு தன்னடக்கமும் பணிவும் எப்போது ஏற்பட்டன? நந்தினி! இவன் வெறும் பார்த்திபேந்திரன் அல்ல. வெங்கியும் கலிங்கமும் வென்று வீரபாண்டியன் தலைகொண்ட பார்த்திபேந்திரப் பல்லவன்!" என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கூறினார்.

நந்தினியின் முகம் ஒரு கண நேரம் புயல் குமுறும் வானத்தைப் போல் இருண்டது. அவளுடைய இரு கண்களிலிருந்தும் இரு மின்னல்கள் தோன்றி ஒளி வீசி உடனே மறைந்தன. அடுத்த கணம் அவள் கலகலவென்று சிரித்தாள்.

"ஐயா! 'வீர பாண்டியன் தலை கொண்ட' பெருமையான பட்டத்தை எத்தனை பேர் சூட்டிக் கொள்கிறார்கள்! அதற்கு ஏதேனும் கணக்கு உண்டா?" என்று கேட்டாள்.

"அம்மணி! தனாதிகாரி என் பேரில் உள்ள அபிமானத்தினால் அவ்விதம் கூறினார். உண்மையில் அந்த விருதுக்கு நான் உரியவன் அல்ல. வீர பாண்டியன் தலை கொண்ட பெருமை ஆதித்த கரிகாலர் ஒருவருக்கே உரியது!"

கல்கி

"அது ஏன் அப்பா, அவ்விதம் சொல்கிறாய்? செத்த பாம்பை அடித்த பெருமையில் உனக்குக் கொஞ்சமும் பங்கு வேண்டாமா?" என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கேட்டு விட்டுக் குறுஞ் சிரிப்புச் சிரித்தார்.

"இல்லை, அரசே! இல்லை! ஆதித்த கரிகாலர் செத்த பாம்பைக் கொல்லவில்லை. அவர் வாளை ஓங்கியபோது வீரபாண்டியன் முழு உயிர் உள்ள பாம்பாகத்தான் இருந்தான். அவன் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தேவலோகத்து மோகினியை ஒத்த ஒரு மங்கை முன்னால் வந்து நின்று கை கூப்பிக் கெஞ்சினாள். வாளை ஓங்கியவன் நானாக இருந்தால் உடனே அவ்வாளைத் தூர வீசி எறிந்திருப்பேன்; வீரபாண்டியன் பிழைத்துப் போயிருப்பான்!" என்று பார்த்திபேந்திரன் பழுவேட்டரையருக்குப் பதில் சொன்னான். ஆனால் அவனுடைய கண்களோ நந்தினியின் முகத்தைக் கூர்ந்து நோக்கின.

நந்தினி, பேச்சு அபாயகரமாகப் போய்க்கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

பழுவேட்டரையரைத் திரும்பிப் பார்த்து, "நாதா! அந்தப் பழைய கதை இப்போது எதற்கு? இவர் இங்கு வந்த காரியம் என்னவென்று விசாரிக்கலாமே!" என்றாள்.

உடனே பழுவேட்டரையரும், "ஆம், தம்பி! பழைய கதை வேண்டாம்! உன் கதையைச் சொல்! காஞ்சியிலிருந்து எப்போது புறப்பட்டாய்? எங்கே பிரயாணம்? இங்கு இறங்கி வந்த காரணம் என்ன?" என்று கேட்டார்.

நந்தினியைப் பார்த்ததால் மதிமயங்கிப் போயிருந்த பார்த்திபேந்திரனும் தான் வந்த காரியத்தை நினைவு கூர்ந்தான்.

"ஐயா! என்னை மன்னிக்க வேண்டும்! ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டேன். மிக முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறேன். சோழநாட்டையே துயரக் கடலில் மூழ்கச் செய்யக் கூடிய பயங்கரமான செய்தி. ஈழத்திலிருந்து என்னுடன் இந்தக் கப்பலில் புறப்பட்டு வந்த இளவரசர் அருள்மொழி வர்மர் சுழற் காற்று அடித்த சமயம் கடலில் குதித்து விட்டார். அவருடைய கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஒரு வேளை இங்கே வந்து ஒதுங்கினாரோ என்று பார்ப்பதற்கு வந்தேன்!" என்றான் பார்த்திபேந்திரன்.

அவன் கூறி முடிப்பதற்குள் "ஆகா! என்ன சொன்னாய்?" என்று பழுவேட்டரையர் அலறினார். சுழற் காற்றினால் வேருடன் பறிக்கப்பட்ட நெடுமரத்தைப் போல் தரையில் விழுந்தார்.

அவரைத் தாங்கி எடுப்பதற்காகப் பார்த்திபேந்திரன் பாய்ந்து சென்றான். நந்தினி குறுக்கே நின்று அவன் நீட்டிய கையைப் பற்றி அகற்றினாள். பழுவேட்டரையரின் அருகில் தான் உட்கார்ந்து அவருடைய தலையைத் தன் மடியின் மீது எடுத்து வைத்துக் கொண்டாள். "தண்ணீர்! தண்ணீர்!" என்று கத்தினாள்.

சடாரத்திலிருந்து சேடிப் பெண் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்தாள். இன்னும் சில வீரர்களும் கலங்கரை விளக்கக் காவலரும் அவர் குடும்பத்தாரும் ஓடி வந்தார்கள். நந்தினி மிக்க கம்பீரத்துடன் அவர்களையெல்லாம் அப்பால் நிற்கும்படி ஏவினாள். பழுவேட்டரையரின் முகத்தில் தண்ணீர் தெளித்தாள். "நாதா! நாதா!" என்று கொஞ்சும் குரலில் அழைத்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் கிழவரின் கண்கள் திறந்தன. உடனே நினைவும் வந்தது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

"நந்தினி! சற்று முன் என் காதில் விழுந்தது உண்மையா? இந்தப் பல்லவன் என்ன சொன்னான்? பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் சொன்னான் அல்லவா? அந்த வீர குமாரன் சின்னஞ் சிறு குழந்தையாயிருந்தபோது இந்தக் கைகளால் அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு மகிழ்ந்தேன். இதே கைகளினால்தான் அவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வரும்படியான கட்டளையில் முத்திரை வைத்தேன். ஐயோ! சோழநாடு என்னைப் பற்றி என்ன நினைக்கும்? தமிழகம் என்ன நினைக்கும்?" என்று பழுவேட்டரையர் தலையில் அடித்துக் கொண்டார். வயிரம் பாய்ந்த அந்த வீரக் கிழவர் அவ்விதம் மனம் கலங்கிப் புலம்பியதை அது வரையில் நந்தினி பார்த்ததில்லை; யாருமே கண்டதில்லை.

"நாதா! பதறாதீர்கள்! இவர் இன்னும் செய்தி முழுதும் சொல்லவில்லையே! முழுதும் கேட்டு விட்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றி யோசிப்பது நலம் அல்லவா?" என்றாள் நந்தினி.

"ஆமாம்; நீ சொல்வது சரிதான். பார்த்திபேந்திரா! சீக்கிரம் சொல்!

பொன்னியின் செல்வர் கடலில் முழுகி இறந்து விட்டார் என்று சொன்னாய் அல்லவா? அது உண்மையா? அல்லது ஏதோ துர்நோக்கத்துடன் கற்பனை செய்து சொல்கிறாயா? பசித்திருக்கும் புலியுடன் விளையாடாதே! ஜாக்கிரதை!" என்று அக்கிழவர் கண்களில் கனல் எழும்படி நோக்கிக் கர்ஜித்தார்.

"ஐயா! மன்னிக்க வேண்டும்! இளவரசர் இறந்து விட்டார் என்று நான் சொல்லவில்லை. அவ்வளவு பயங்கரமான நஷ்டம் இத் தமிழகத்துக்கு ஏற்பட்டிருக்கும் என்று என்னாலும் நம்ப முடியவில்லை. சுழற் காற்று உக்கிர நிலையை அடைந்திருந்தபோது அவர் என் கப்பலிலிருந்து கடலில் குதித்தார் என்று தான் சொன்னேன். கடவுள் அருளால் ஒருவேளை பிழைத்திருக்கலாம். இந்தக் கடற்கரையிலே வந்து ஒதுங்கி யிருக்கலாம். அந்த ஆசையுடனேதான் பார்ப்பதற்கு இங்கே வந்தேன்..."

"சுழற் காற்று அடித்தபோது கடலில் குதித்தாரா! எதற்காக? ஏன் குதித்தார்? உன்னுடைய கப்பலில் அவர் ஏன் ஏறினார்? அவர் குதித்தபோது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்று பழுவூர் அரசர் படபடப்புடன் கேட்டார்.

நந்தினி குறுக்கிட்டு, "ஐயா! இவர் இலங்கைக்கு எதற்குப் போனார் என்பதிலிருந்து விவரமாகச் சொல்லட்டும்!" என்றாள்.

"ஆமாம்; உள்ளது உள்ளபடியே சொல்லு! உண்மையைச் சொல்லாவிட்டால் நீ உயிருடன் தப்ப முடியாது! உன்னை..." என்று பழுவேட்டரையர் பற்களை நற நற வென்று கடித்தார்.

"அரசே! உண்மையைத் தவிர வேறு எதுவும் சொல்லி எனக்குப் பழக்கம் இல்லை. நான் பொய் சொல்ல நினைத்தாலும் என் நாக்குச் சொல்லாது. கேளுங்கள்! தாங்களும் கடம்பூர்ச் சம்புவரையரும் மற்றும் பலரும் சோழ குலத்துக்கு விரோதமாகச் சதி செய்கிறீர்கள் என்று காஞ்சி நகருக்குச் செய்தி எட்டியது."

"பொய்! பொய்! முற்றிலும் பொய்!"



"செய்தி பொய்யா யிருக்கட்டும்! அதுவே நான் வேண்டுவது. காஞ்சிக்கு எட்டிய செய்தியையே நான் கூறினேன். அதன்பேரில் திருக்கோவலூர் மலையமானும் ஆதித்த கரிகாலரும் என்னை ஈழத்துக்கு அனுப்பினார்கள். அருள்மொழி வர்மரைக் கையோடு அழைத்து வரும்படி அனுப்பினார்கள்......"

இவ்வாறு ஆரம்பித்துப் பார்த்திபேந்திரன் தான் இலங்கை சேர்ந்தது முதல் நடந்ததை யெல்லாம் தான் அறிந்தவரையில் விவரமாகக் கூறினான்.

கதை முடிந்ததும் பழுவேட்டரையர், "கடவுளே! சோழநாட்டுக்குப் பெருங் கேடு வந்துவிட்டது! இந்தப் பாவியினால் தான் வந்தது! இளவரசரைச் சிறைப் படுத்திக் கொண்டு வரும்படி நான் அல்லவோ கட்டளை போட்டேன்? நான் அல்லவோ மரக்கலங்களை அனுப்பினேன்?" என்று கதறினார்.

"அரசே! தங்கள் குற்றம் ஒன்றும் இல்லை. தாங்கள் கட்டளை பிறப்பித்திரா விட்டாலும் இந்த மனிதருடைய கப்பலில் இளவரசர் ஏறிக் காஞ்சிக்குப் பயணமாயிருப்பார் அல்லவா? வீணாக நொந்து கொள்ள வேண்டாம். நம்முடைய செயல்களுக்கு மேலே விதியின் செயல் ஒன்று இருக்கிறது. மேலும்..."

நந்தினி இவ்விடத்தில் உரத்துப் பேசுவதைச் சட்டென்று நிறுத்திப் பழுவேட்டரையரின் காதோடு ஏதோ சொன்னாள்.

பழுவேட்டரையரின் முகம் சிறிது மலர்ச்சி அடைந்தது. "ஆமாம்; ஆமாம்! அது எனக்குத் தோன்றாமல் போயிற்று!" என்றார்.

பிறகு பார்த்திபேந்திரனைப் பார்த்து, "பல்லவா! உன் கப்பலுக்குப் போய் நான் பரிசோதித்து விட்டு வரப் போகிறேன். அதுவரை நீ இங்கேயே இருக்க வேண்டும். தப்பிச் செல்ல முயல வேண்டாம். ஓட முயற்சி செய்தால் உடனே வேல் எறிந்து கொல்லும்படி என் வீரர்களுக்குக் கட்டளை யிட்டுவிட்டுப் போகப் போகிறேன். ஜாக்கிரதை! முதுகிலே

காயத்துடன் சாகாதே! உன் பரம்பரை வீர பரம்பரை!" என்றார்.

"வந்தனம், ஐயா! தப்பித்து ஓடும் எண்ணமே எனக்குக் கிடையாது. அத்தகைய எண்ணமிருந்தால் உங்கள் வீரர்கள் யாராலும் தடுக்க முடியாது. முதுகிலே காயப்படும் உத்தேசமும் எனக்கு இல்லை!" என்றான் பல்லவன்.



"அரசே! இவரைப் பற்றித் தாங்கள் கவலைப் பட வேண்டாம். நானே பார்த்துக் கொள்கிறேன். தப்பி யோடப் பார்த்தால் இதோ இந்தக் கத்தி உடனே இவர் மார்பில் பாயும்! நீங்கள் நிம்மதியாகப் போய்க் கப்பலைச் சோதித்து விட்டு வாருங்கள். மாலுமிகளையும் விசாரியுங்கள். இவர் கூறியதெல்லாம் உண்மைதானா என்று."—இவ்விதம் நந்தினி கூறிக் கொண்டே இடுப்பிலிருந்து ஒரு சிறிய கத்தியை எடுத்தாள்.

"ராணி! உனக்கு ஏன் இந்தப் பொறுப்பு? நீ கூடாரத்துக்குள் போயிரு! அல்லது தியாக விடங்கரின் வீட்டில் போய் இரு. இவனை நம் வீரர்களே கவனித்துக் கொள்வார்கள். அல்லது இவனையும் நான் என்னோடு கப்பலுக்கு அழைத்துப் போகிறேன்......"

"நான் வரவில்லை, ஐயா! நான் தங்களுடன் வந்தால் தங்களுக்கு மறுபடியும் சந்தேகமாகத் தானிருக்கும். மாலுமிகள் எனக்காகச் சாட்சி சொல்லி விட்டதாய் நினைப்பீர்கள். நான் இவ்விடத்தை விட்டு நகர மாட்டேன். தாங்கள் கவலையின்றிப் போய் வாருங்கள்!"

"நாதா! தாங்கள் கப்பலிலிருந்து திரும்பி வரும் வரையில் நானும் இங்கேயேதான் இருக்கப் போகிறேன். இங்கிருந்தபடி தங்களைப் பார்த்துக்கொண்டே இருப்பேன்!" என்றாள் நந்தினி.

பிறகு பழுவேட்டரையரின் காதோடு "இவன் இங்கே ஏதேனும் துப்பறிய வந்திருக்கிறானோ, என்னமோ, யார் கண்டது? மேலும் இளவரசரைப் பற்றிய செய்தி தாங்கள் திரும்பிவரும் வரையில் யாருக்கும் தெரியக் கூடாது" என்றாள்.

பழுவேட்டரையர் தலையை அசைத்து விட்டுப் படகில் ஏறினார். படகு மரக்கலத்தை நோக்கிச் சென்றது.

படகு சிறிது தூரம் போகும் வரையில் நந்தினி படகையே பார்த்துக்கொண்டிருந்தாள். அதே சமயத்தில் பார்த்திபேந்திரன் கண் கொட்டாமல் தன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். சட்டென்று அவன் பக்கம் திரும்பினாள். பார்த்திபேந்திரன் வெட்கித் தலை குனிவான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் தேன் மலரைப் பார்த்து விட்ட வண்டு அப்பால் திரும்புமா?

நந்தினி கூரிய சிறிய கத்தியை எடுத்து மறுபடி காட்டி, "ஜாக்கிரதை! தப்பி ஓடப் பார்க்க வேண்டாம்!" என்றாள்.

"தேவி! கத்தியைக் காட்டிப் பயமுறுத்துவானேன்? தப்பியாவது? ஓடுவாவது? வலையில் அகப்பட்ட மீன் எவ்விதம் தப்பி ஓடும்? தாங்கள் விரித்த வலையில் அகப்பட்டு......"

"என்ன, ஐயா, சொல்கிறீர்? என்னை வலைஞர் குலப்பெண் என்று சொல்கிறீரா? இது பழுவூர் அரசர் காதில் விழுந்தால்......"

"அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை, தேவி! ஆனால் மீன் பிடிக்கும் வலையை நான் குறிப்பிடவும் இல்லை. தங்களுடைய சேல் விழிகள் விரிக்கும் மோக வலையைச் சொல்கிறேன்......"

"சீச்சீ! என்ன தைரியம் உமக்கு? வலைஞர் குலப் பெண் என்றாலும் பாதகமில்லை. ஆடவர்களுக்கு மோக வலை விரிக்கும் கணிகை என்று என்னைச் சொல்லுகிறீர்?"

"மன்னிக்க வேண்டும்! அப்படிப்பட்ட அபராதத்தையும் நான் செய்யவில்லை. தாங்கள் வேண்டும் என்று வலை விரிக்க வேண்டுமா, என்ன? சிலந்திப் பூச்சி வலை நெய்வது ஈக்களைப் பிடிப்பதற்காகவா? அது தான் வசிப்பதற்காக வலை பின்னுகிறது. ஈக்கள் தாமாகப் போய் அவ்வலையில் விழுகின்றன......"

"என்னைச் சிலந்திப் பூச்சி என்று சொல்கிறீர்? அவ்வளவு பயங்கரமாக இருக்கிறேனா நான்?"

"தவறு! தவறு! நான் தீபத்தைச் சொல்லியிருக்க வேண்டும். தீபம் எரிவது விட்டில் பூச்சிகளுக்காக அல்ல. தீபம் எரிந்து தன்னைச் சுற்றிலும் ஒளி

வீசி ஜோதி மயமாகச் செய்கிறது. அசட்டு விட்டில் பூச்சிகள் அதைக் கனி என்று நினைத்துக் கொண்டு சென்று விழுந்து மாய்கின்றன......''

''ஒரு சிறிய காற்று குப் என்று அடித்தால் தீபம் அணைந்து விடுகிறது. வாயினால் ஊதிக்கூட அணைத்து விடலாம். தீபத்தின் சக்தி அவ்வளவுதான்!''

''தீபம் அணைந்துவிடும்; ஆனால் பூரண சந்திரனை யார் அணைக்க முடியும்? பூரண சந்திரன் சமுத்திர ராஜனுக்காக உதயமாகவில்லை. இயற்கை நியதியின் படி சந்திரன் உதயமாகிறது. அதன் குளிர்ந்த நிலா ஒளியை வானமும் பூமியும் மகிழும்படி பரப்புகிறது. ஆனால் பேதைக் கடலைப் பாருங்கள்! பூரண சந்திரனைக் கண்டு கடல் எதற்காக அப்படிக் கொந்தளிக்க வேண்டும்? எட்டாத பழத்துக்கு ஏன் கொட்டாவி விட்டுத் தவிக்க வேண்டும்?''

''பல்லவ குல மன்னர்களின் கவிதா ரஸனையைப் பற்றியும் கற்பனைத் திறனைப் பற்றியும் ரொம்பவும் கேள்விப் பட்டிருக்கிறேன். அவை யெல்லாம் உண்மை யென்பதாக இப்போதுதான் உணர்கிறேன்.''

''புராணங்களிலும் காவியங்களிலும் நான் படித்ததையும் கேட்டதையும் நேற்று வரை நம்பவில்லை; இன்றைக்குத் தான் எனக்கு நம்பிக்கை பிறக்கிறது.''

''எதைப் பற்றிச் சொல்கிறீர்?''

''பெண் உருவங் கொண்டவர்கள் சிலர் வானத்தையும் பூமியையும் தங்கள் காலடியில் போட்டுக் கொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்று கேட்டிருக்கிறேன். பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த அசுரர்கள் அமுதபானம் செய்ய வேண்டிய சமயத்தில் மோகினியினால் ஏமாந்து போனார்கள். சுந்தோபசுந்தர்கள் ஒரு பெண் நிமித்தமாக அடித்துக் கொண்டு செத்தார்கள். மேனகையினால் விசுவாமித்திரர் தவம் கெட்டது. கோவலன் மாதவியின் மோக வலையில் விழுந்து கிடந்தான். தசரதர் கைகேசிக்காக இராமனைக் காட்டுக்கு அனுப்பினார். எகிப்து நாட்டு ராணியின் காரணமாக மகத்தான ரோம சாம்ராஜ்யம் அழியத் தொடங்கியது......''

''போதும், ஐயா! போதும்! இந்த உதாரணங்களை யெல்லாம் எதற்காகச் சொல்கிறீர்?''

''தெரியவில்லையா, தேவி! யாருக்கு உதாரணமாகச் சொல்கிறேன் என்று உண்மையாகவே தெரியவில்லையா?''

''எனக்கு உதாரணமாகச் சொல்கிறதாயிருந்தால், அதைப்போல் பெரிய தவறு நீர் வேறு செய்ய முடியாது.''

''தவறு ஒன்றுமில்லை. அவர்களுடைய சக்தியைக் காட்டிலும் தங்கள் சக்தி குறைந்தது அன்று.''

''உம்முடைய வாய் மொழியே உமக்கு விரோதமாயிருக்கிறது.''

''எப்படி, தேவி!''

''பழுவூர் அரசரை நான் வேண்டுமென்றுதான் கப்பலுக்கு அனுப்பினேன். உம்முடன் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்பதற்காக.''

''தங்கள் நோக்கத்தைத் தெரிந்து கொண்டுதான் நானும் அவருடன் போகாமல் இங்கேயே தங்கினேன்.''

''வீர பாண்டியனை ஒரு பெண் காப்பாற்ற முயன்றாள் என்றும் ஆதித்த கரிகாலர் அதைப் பொருட்படுத்தவில்லை யென்றும் நீர் சொன்னீர் அல்லவா?''

''ஆம், சொன்னேன்.''

''காப்பாற்ற முயன்ற பேதைப் பெண் யார் என்று தெரியுமா?''

''இப்போது பழுவூர் அரண்மனையின் ஜோதியாக விளங்கும் இளைய ராணி நந்தினி தேவிதான்.''

''நீர் சற்று முன் வர்ணித்தபடி எனக்கு அவ்வளவு சக்தி இருந்திருந்தால் நான் காப்பாற்ற விரும்பிய ஒரு மனிதரின் உயிரைக் காப்பாற்றியிருக்க மாட்டேனா? அது ஏன் என்னால் முடியாமற் போயிற்று?''

''இரத்த வெறி கொண்டிருந்த ஆதித்த கரிகாலர் அச்சமயம் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவில்லைதான். ஆனால் அதற்குப் பிறகு மூன்று வருஷமாக அவர் எத்தகைய சித்திரவதையை அநுபவித்து வருகிறார் என்பதை நான் அறிவேன்.''

''உமக்கு எப்படித் தெரியும், ஐயா! உம்மிடம் சொன்னாரா?''

''மூன்று வருஷமாய் மனதிலேயே வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தை ஏதோ ஒரு துன்பம் அரித்துக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் அறிந்திருந்தேன். பத்துநாளைக்கு முன்பு, நான் ஈழத்துக்குப் புறப்பட்டதற்கு முதல் நாள்தான்,—மனதைத் திறந்து என்னிடம் சொன்னார். அதுமுதல்......''

''அதுமுதல் என்ன?''

''பழுவூர் இளையராணியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனதிலும் குடி கொண்டு விட்டது!''

"ஆதித்த கரிகாலரின் நிலையில் நீர் இருந்திருந்தால் நான் கேட்டுக் கொண்டதற்காக வீர பாண்டியரை உயிரோடு விட்டிருப்பீர் என்று சொன்னது நினைவிருக்கிறதா?"

"நன்றாக நினைவிருக்கிறது."

"அது உண்மைதானா?"

"சத்தியம், தேவி! தாங்கள் சோதித்துப் பார்க்கலாம்."

"ஐயா! என் மனதில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?"

"தங்கள் தங்கக் குரலில் எதைச் சொன்னாலும் என் செவிகள் இன்பம் அடையும்; உள்ளம் பூரிக்கும்."

"நீர் என்னைச் சோதிப்பதற்காகவே இப்படிப் பேசுகிறீர் என்று சந்தேகிக்கிறேன். நான் விரிக்கும் மோக வலையைப் பற்றிப் பேசி நீர் எனக்கு வலை விரிக்கப் பார்க்கிறீர். என்னுடைய அந்தரங்கத்தை அறிந்து கொள்ள முயல்கிறீர்."

பார்த்திபேந்திரன் திடுக்கிட்டுப் போனான். ஆரம்பத்தில் அவன் பேச ஆரம்பித்தபோது அந்த எண்ணத்தோடு தான் ஆரம்பித்தான். பிறகு அதை மறந்தே விட்டான். கபடமாக ஆரம்பித்த பேச்சு அவனை மோகக் கடலில் உண்மையாகவே தள்ளி விட்டது. முதலில் அப்படி எண்ணியது குறித்து அவன் வெட்கப்பட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "தேவி! அவ்விதம் தங்களைச் சோதித்து ஒற்றன் வேலை செய்ய நான் பிரயத்தனப்படும் பட்சத்தில் என் தலையில் இடி விழட்டும்!" என்றான்.

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்!" என்று நந்தினி அலறினாள்.

"ஏன், தேவி! ஏன்?"

"உங்கள் பெரிய இளவரசரிடமிருந்து வந்தவன் இன்னொருவன்—அவன் பெயர் என்ன?......"

"வந்தியத்தேவனா?"

"ஆம், அவன்தான்! என்னிடம் மிகத் தந்திரமாக ஒற்று அறிந்து போக முயன்றான். தாங்கள் சொல்வதைப் பார்த்தால் அவன் தலையில் இடி விழுந்தே விட்டது போலிருக்கிறதே!"

"துரதிர்ஷ்ட வசமாக அவன் தலையில் இடி விழவில்லையே? அவன் நின்ற கப்பலில் அல்லவா விழுந்தது? அதனால் அவனுக்கு வந்த ஆபத்து சின்ன இளவரசரையும் அல்லவா பீடித்துவிட்டது?"

"பாவம்! பழையாறை இளைய பிராட்டியை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. அவள் இந்த உலகில் மிகவும் பிரியம் வைத்திருந்த இருவர் ஏக காலத்தில் மாண்டு போனார்கள்! என்ன துரதிர்ஷ்டம்?"

"தேவி! இரண்டு பேர்கள் யார்?"

"நீர் சொன்ன இரண்டு பேருந்தான்! இளைய பிராட்டிக்குத் தம்பியின் மீது தனி வாஞ்சை உண்டு அல்லவா?"

"அது உலகம் அறிந்தது. அவளுடைய பிரியத்துக்குப் பாத்திரமான இன்னொருவர்......?"

"ஏன்? உங்கள் பெரிய இளவரசர் அனுப்பிய தூதன்தான்."

"வந்தியத் தேவனையா சொல்லுகிறீர்கள்?"

"அவனைத்தான்!"

"சீச்சீ! சோழ சாம்ராஜ்யத்தையே ஆட்டுவிக்கும் சக்தி வாய்ந்த பழையாறை இளைய பிராட்டி அற்பனும், தற்பெருமைக் காரனும், அதிகப் பிரசங்கியுமான அந்த வாலிபன்மீது......"

"ஆம்; அந்த வாலிபன்மீது மோகம் கொண்டாள். அதனாலேதான் அவனைப் பழுவேட்டரையரின் தண்டனையிலிருந்து தப்புவிப்பதற்காக ஓலை கொடுத்து இலங்கைக்கு அனுப்பினாள். பாவம்! இந்தக் கிழவர் இளவரசரின் துர்க்கதிக்குத் தாம் காரணம் என்று துடியாய்த் துடிக்கிறார். உண்மையில் அதற்கு இளைய பிராட்டி தான் காரணம். அவள் மட்டும் ஓலை கொடுத்து அனுப்பாதிருந்தால்......"

"உண்மை, உண்மை! இந்த விபரீதம் எல்லாம் ஏற்பட்டிராது."

"என் கணவர் கப்பலிலிருந்து திரும்பி வந்ததும் இந்த உண்மையை அவருக்கு நீர் எடுத்துச் சொல்ல வேண்டும். சொன்னால், என்னுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆவீர்!"

"அம்மணி! தங்களுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆக இது ஒன்றுதானா வழி? வேறு எனக்குத் தாங்கள் இடக் கூடிய பணிகள் இல்லையா?"

"ஐயா! ஒரு பேதைப் பெண்ணின் நன்றிக்குப் பாத்திரமாக எத்தனையோ நூறு வழிகள் உண்டு."

"அவற்றில் இன்னும் இரண்டொன்றைச் சொல்லுங்கள். ஆதித்த கரிகாலருக்கு அப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அதை அவர் கைசோர விட்டு விட்டார். விட்டு விட்டு அப்புறம் இரவு பகலாகத் துடி துடிக்கிறார். நான் ஒரு நாளும் அத்தகைய தவறைச் செய்ய மாட்டேன்!"

"இது சத்தியமா, ஐயா? ஒரு பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்

காக அவன் எது சொன்னாலும் செய்யக் கூடிய மனிதரா நீங்கள்?"

"எந்தப் பெண் என்பதைப் பொறுத்தது, தேவி! நேற்று வரைக்கும் நான் பார்த்திருக்கும் எந்தப் பெண்ணின் விருப்பத்துக்காகவும் எதுவும் செய்திருக்க மாட்டேன்; சொன்னால் சிரித்திருப்பேன். இன்று அப்படியல்ல. தாங்கள் சொல்லிப் பாருங்கள். எனக்கு நூறு உயிர்கள் இருந்தால் அவ்வளவையும் தங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அர்ப்பணம் செய்வேன். ஆயிரம் சாம்ராஜ்யங்கள் என் வசம் இருந்தால் அவ்வளவையும் தங்கள் விருப்பத்திற்காகத் தியாகம் செய்வேன். இகத்தையும் பரத்தையும் என்றென்றைக்கும் இழக்கும்படி சொன்னால் அதற்கும் சித்தமாயிருப்பேன். கொடிய பகைவர்களை மன்னிக்கச் சொன்னால் மன்னிப்பேன். அத்தியந்த நண்பர்களின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் போடச் சொன்னால், போட்டுவிட்டு மறு காரியம் பார்ப்பேன்......!"

இவ்விதம் பார்த்திபேந்திரன் வெறி கொண்டவனைப்போல் கூறியபோது அவனுடைய உடம்பு தலையிலிருந்து கால் வரையில் நடுநடுங்கியது; அவனுடைய வாயிலிருந்து வந்த சொற்கள் குழறின; உதடுகள் துடித்தன; பற்கள் கடித்தன; ரோமங்கள் குத்திட்டு நின்றன; மூச்சு விடும் சத்தம் கொல்லன் உலைச் சத்தத்தைப் போலக் கேட்டது.

பார்த்திபேந்திரனுடைய இந்த மாறுதல் நேயர்களுக்கு வியப்பை அளிக்கும். ஏன்! அவனிடமே "நீ இப்படி ஆவாய்!" என்று முதல் நாள் யாராவது சொல்லியிருந்தால், அவன் நம்பியிருக்கமாட்டான். பிற்காலத்தில் நினைத்துப் பார்த்தால் அவனுக்கே கூட வியப்பளிக்கக் கூடிய காரியந்தான்.

ஆனால் இது ஒரு பார்த்திபேந்திரனைப் பற்றிய அதிசயம் மட்டும் அல்ல; மனித இயற்கை பற்றிய இரகசியம்.

வாழ்நாளெல்லாம் பழி பாவங்களில் மூழ்கிக் கிடந்தவர்கள் திடீரென்று ஒரு நாள் வைராக்கிய சீலர்களாகிறார்கள்; பக்தி பரவச மடைந்து ஆடிப் பாடுகிறார்கள்; இறைவன் கருணைக்குப் பாத்திரமாகிறார்கள்; மனித சமூகத்துக்கு ஒப்பற்ற தொண்டுகளும் புரிகிறார்கள்.

இதற்கு மாறாக, நெடுங் காலமாய்த் தூய்மையான களங்கமற்ற வாழ்க்கை நடத்தியவர்கள் திடீரென்று ஒரு நாள் வழுக்கி விழுகிறார்கள்; அப்படி விழும் போது அதல பாதாளத்திலேயே விழுந்து விடுகிறார்கள்.

எத்தனையோ மேதாவிகள் காலமெல்லாம் ஆராய்ச்சி செய்த பின்னரும் மனித உடம்பின் அமைப்பு இரகசியத்தை நம்மால் முழுதும் அறிந்து கொள்ள முடியவில்லை. மனித இதயத்தின் அமைப்பு இரகசியத்தை நாம் எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்?

பார்த்திபேந்திரனுடைய ஆவேச மொழிகளைக் கேட்டு வந்த நந்தினி, "போதும், ஐயா, போதும்! நிறுத்துங்கள்! அவ்வளவு பயங்கரமான காரியம் எதையும் செய்யும்படி தங்களை ஒரு நாளும் நான் வற்புறுத்தப் போவதில்லை. தங்களுக்கும் எனக்கும் உகந்த சந்தோஷமான ஒரு காரியத்தைத்தான் சொல்லப் போகிறேன்" என்றாள். (தொடரும்)



# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## துருக்கி—8

துருக்கி மக்கள் 1923-ம் வருஷத்தை எக்காலத்திலும் மறக்க முடியாது. அந்த ஆண்டில் தான் துருக்கியில் குடியரசு ஏற்பட்டது. துருக்கி மக்களைத் தூக்கத்தில் ஆழ்த்திய பல சம்பவங்கள் நிகழ்ந்த இஸ்தான்புல் (கான்ஸ்டாண்டி நோபிள்) அது வரையில் துருக்கியின் தலைநகராக இருந்தது. ஆனால் துருக்கி குடியரசு ஆனதிலிருந்து தலைநகரைத் தேசியக் கட்சியினர் அங்காராவுக்கு மாற்றி விட்டார்கள்.

முஸ்தபா கெமால் பாஷா துருக்கியின் முதலாவது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தேசிய மகாசபை அவருக்குச் சர்வாதிகாரம் அளித்தது.

கெமால் பாஷா அதிகாரத்துக்கு வந்த உடனேயே, துருக்கி மக்களிடையே நிலவி வந்த பண்டைய பல பழக்க வழக்கங்களை ஒழிக்க முற்பட்டார். எனவே அவருக்கு எதிர்ப்பு அதிகமாகி வந்தது.

துருக்கியர்களும் முஸ்லிம்களும் தலையில் வெகு காலமாக வழக்கமாய் வைத்துக் கொண்டிருந்த குல்லாவை எடுத்து விட வேண்டும் என்று கெமால் பாஷா உத்தரவிட்டார். அதற்கிணங்க, அவர் தாமே ஒரு பொதுக் கூட்டத்தில் ஐரோப்பியர் அணிந்து கொள்ளும் தொப்பியுடன் (hat) காட்சியளித்ததைக் கண்டு பண்டைய வழக்கங்களில் ஊறிய துருக்கி மக்கள் திடுக்கிட்டனர். எனினும் கெமால் பாஷா முக்கியமாக அவ்விஷயத்தில் தமது உறுதியைச் சிறிதும் தளர்த்த விரும்பவில்லை.

சீனர்களில் ஆடவர்கள்கூடத் தலையை வாரிப் பின்னிக் கொள்வது வழக்கமாக இருந்தது. சீனாவின் தந்தையான டாக்டர் ஸன்யாட் சென் அதிகாரத்துக்கு வந்தபின் அந்த வழக்கத்தை ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டார்; சீன ஆடவர்களின் பின்னலை பலாத்காரமாகக் கத்தரித்து விடும்படியும்போலீசாருக்குக் கட்டளை யிட்டாராம். அவர் காலத்திலிருந்துதான் சீனாவில் ஆடவர்கள் தலையைப் பின்னிக் கொள்ளும் வழக்கம் மறையத் தொடங்கியது.

அதுபோலவே கெமால் பாஷாவும், முஸ்லிம் குல்லாய் அணிவது கிரிமினல் குற்றம் என்று கட்டளையிட்டார். மேற்படி கட்டளையைக் கண்டித்து நடந்த கலகங்கள் பலாத்காரமாக அடக்கப்பட்டன. கலகங்களைத் தூண்டி விட்டவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். கடைசியாக கெமால் பாஷா தமது முயற்சியில் பெரிதும் வெற்றிபெற்றார்.



* * *

கெமால் பாஷாவின் சீர்திருத்த முறைகளை விரும்பாத துருக்கித் தலைவர்கள் கெமால் பாஷாவுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்யத் தொடங்கினர். சாதுவான புதிய கலிபாவைப் பலர் சூழ்ந்து கொண்டு கெமால் பாஷாவுக்கு எதிராகத் தூண்டிவிட முற்பட்டனர்.

இத்தகைய சில்லறை வேலைகள் எல்லாம் கெமால் பாஷாவுக்கு ஆத்திரத்தை உண்டாக்கின. துருக்கியின் முன்னேற்றத்துக்குத் தடையாகவும் புதிய பிரச்னைகளுக்கு ஊற்றுக் காலாகவும் இருக்கும் கலிபா பதவியை ஒழித்துக் கட்டினாலன்றி, தமது சீர்திருத்த முறைகளை எளிதில் அமுலுக்குக் கொண்டு வர முடியாது என்று ஜனாதிபதி கெமால் பாஷாவுக்குத் தோன்றியது.

அதற்குத் தகுந்தாற் போல், லண்டனிலிருந்து வந்த கடிதம் ஒன்று அவருக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. அதில் கனம் ஆகாகானும் இந்தியாவில் ஏற்கெனவே நீதிபதியாக இருந்த அமீர் அலியும் கையெழுத்திட்டிருந்தனர். இந்தியாவில் உள்ள கோடிக் கணக்கான முஸ்லிம்களின் சார்பில் தாங்கள் பேசுவதாக அவர்கள் குறிப்பிட்டிருந்தார்கள். கலிபாவிடம் கெமால் பாஷா நடந்து கொள்ளும் முறையை அவர்கள் வன்மையாகக் கண்டித்திருந்தனர். கலிபாவை மரியாதையாகவும் கௌரவமாகவும் நடத்த வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தினர்.

ஆகாகானும் அமீர் அலியும் தாங்கள் எழுதிய மேற்படி கடிதத்தை முதலிலேயே இஸ்தான் புல்லுக்கு அனுப்பி விட்டார்கள். எனவே அக்கடிதம் கெமால் பாஷாவின் கைக்கு வருவதற்கு முன் இஸ்தான்புல் பத்திரிகைகள் அதைப் பிரசுரித்து விட்டன. இந்தச் சம்பவம் கெமால் பாஷாவின் கோபத்தை இன்னும் அதிகப்படுத்தியது.

துருக்கி மக்களுக்கு ஆத்திரம் ஏற்படும்படி செய்யவும், தமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவும் கெமால் பாஷா அந்தக் கடிதத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டார்!

துருக்கியர்கள் பல ஆண்டுகளாகப் பட்ட கஷ்டம் போதா



சென்ற மாதம் ராஜபாளையத்தில் வெகு விமரிசையாக கம்பர் விழா கொண்டாடப்பட்டது. தென்காசி, ஜில்லா முன்சீப் ஸ்ரீ மகாராஜன் தலைமை வகித்தார். ஈரோடு மீனாக்ஷி சுந்தர முதலியார், தமிழாசிரியர் திருமலை அய்யங்கார், கூர்மாவதாரக் கோனார், சுப்பராஜா, ஹெட்மாஸ்டர் சுப்பிரமணிய அய்யர் முதலியவர்கள் சொற்பொழிவாற்றினார்கள். கம்பர் கழகத் தலைவர் ஸ்ரீமான் பி. எஸ். சின்ன வெங்கடராஜா தமது பேரப் பிள்ளையுடன் இருக்கிறார். மேற்படி கழகக் காரியதரிசி ஸ்ரீ பூ. வை. கந்தசாமி ராஜா, என். ஏ. ராமசாமி ராஜா முதலியவர்களை நிற்கிற வரிசையில் காணலாம்.

தென்று துருக்கியர்களிடையே பிளவை உண்டாக்க பிரிட்டிஷார் சூழ்ச்சி செய்கின்றனர் என்றும், அந்தச் சூழ்ச்சிதான் ஆகாகானின் கடிதத்துக்குக் காரணம் என்றும் கெமால் பாஷா நாடெங்கும் பிரசாரம் செய்ய முற்பட்டார்.

"ஆகாகான் பிரிட்டிஷாரின் விசேஷ ஏஜண்டாக இருந்து வருகிறார். அவர் எப்போதும் இங்கிலாந்திலேயே வசிக்கிறார். மேல் நாடுகளில் நடைபெறும் குதிரைப் பந்தயங்களில் ஆகாகான் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்வதுடன், பிரிட்டிஷ் அரசியல்வாதிகளுடன் நெருங்கிய நட்புக் கொண்டிருக்கிறார். அவரை ஒரு மாசற்ற முஸ்லிம் என்று சொல்வதற்கில்லை.

"முதலாவது மகா யுத்தத்தின்போது அவரைப் பிரிட்டிஷார் சுல்தான்-கலிபாவுக்கு விரோதமாகப் பயன்படுத்திக் கொண்டதுடன், தந்திரப் பிரசாரத்தினால் ஆகாகானின் செல்வாக்கு அதிகமாகும்படியும் செய்தனர். இப்போது கலிபாவுக்காகப் பரிந்து பேசும் ஆகாகான், யுத்த காலத்தில் கலிபாவை ஏன் ஆதரிக்கவில்லை? அப்போது அவர் கலிபாவுக்கு விரோதமாகப் பிரிட்டிஷாரின் கட்சியில் இருக்கவில்லையா?"

இவ்விதம் கெமால் பாஷா செய்த பிரசாரம் ஆகாகானின் செல்வாக்கை அடியோடு குலைத்து விட்டது. ஆகாகான் கடிதத்தைப் பிரசுரித்த இஸ்தான்புல் பத்திரிகாசிரியர்கள் துரோகிகள் என்று குற்றம் சாட்டப்பட்டுத் தண்டனை யடைந்தனர்.

கெமால் பாஷாவின் மேற்படி பிரசாரத்தினால் கலிபா மீதும் துருக்கியர்களுக்கு வெறுப்பு ஏற்படலாயிற்று! எனவே, அது தான் சமயம் என்று கருதிய கெமால் பாஷா துருக்கி தேசிய மகாசபையில் ஒரு மசோதா கொண்டு வந்தார். கலிபா பதவியை ஒழிப்பதே அந்த மசோதாவின் நோக்கமாகும். 1924—ம் வருஷம் அந்த மசோதா துருக்கி பார்லிமெண்டான தேசிய மகாசபையில் அதிக எதிர்ப்பின்றி நிறைவேறியது.

முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் கலிபாவுக்கு விரோதமாக பிரிட்டிஷார் நடவடிக்கைகளைக் கைக்கொண்ட போது, இந்தியா முழுதும் கலிபாவை ஆதரித்தது. பிரிட்டிஷாரை எதிர்த்தும், கலிபாவுக்குச் சாதகமாகவும் இந்தியா தேசம் எங்கும் கிலாபத் கமிட்டிகள் அமைக்கப்பட்டன. மேற்படி கிளர்ச்சியில் முஸ்லிம்களுடன் ஹிந்துக்களும் சேர்ந்து கொண்டார்கள். ஆனால் கடைசியில், துருக்கியர்களே கலிபாவுக்கு விரோதமாக நடவடிக்கை எடுத்துக் கொண்டதுடன், கலிபா பதவியையே துருக்கியிலிருந்து ஒழித்து விட்டார்கள்!




## 16

மரத்தடி இருப்பிடம்; எடுப்பது பிச்சை,
இரவில் மோவாய்ச் சேருது முழங்கால்; ஆயினும்
இவனையும் ஆட்டுது ஆசைப் பேய்
எவனையும் விடாதோ இந்தத் தீரா நோய்?

* * *

அக்ரே வஹ்னி ப்ருஷ்டே பானு:
ராத்ரௌ சுபுக ஸமர்ப்பித ஜானு:
கரதல பிக்ஷஸ் தருதல வாஸ:
ததபிந முஞ்சத் யாசா பாச:

குளிர் தாங்கவில்லை கிழவனுக்கு; நடுங்குகிறான். சிக்கினபோது நெருப் பண்டை உட்காருவான். வெயில் காய் வான். ராத்திரியோ முழங்கால் நீட்டிப் படுக்க முடியவில்லை. நாளைச் சோறு நிச்சயமில்லை. ஆயினும் இவன் ஆசை களோ கணக்கில்லை.

## 17

அறிவு வேண்டும்; அறிவு வேண்டும். இதை எல்லா மதங்களும் எல்லாச் சம்பிர தாயங்களும் வற்புறுத்திக் கூறுகின்றன.

கங்கையில் குளித்துக் கடலில் மூழ்கி
எங்கேயும் போய் எந்த நோன்பு நோற்றும்
தானங்கள் பல செய்து புண்ணியம் பல சேர்த்தும்
ஞானத்தை அடையாது விடுதலை யில்லை
இமயம் முதல் குமரி வரையில் தாபித்த
சமயங்க ளெல்லாம் சம்மதித்த நிதுவே

குருதே கங்கா ஸாகர கமனம்
வ்ரத பரிபாலன மதவா தானம்
ஞான விஹீனஸ் ஸர்வ மதேன
முக்திம் பஜதி நஜன்ம சதேன.

காசி யாத்திரையும் சேது ஸ்நானமும் பற்பல விரதங்களும், சிறந்த தானங் களும் செய்து புண்ணியம் சம்பாதித் தாலும் மெய்யறிவு அடையாமலிருப்பவ னுக்கு மோக விமோசனம் கிடையாது. உள்ளத் தூய்மையும் உண்மை பக்தியும் இருந்தால் இந்த ஸ்நான தான விரதங் கள் பயன்படும். இல்லாவிடில் பயனில்லை.

அறிவு என்றால் நூலாராய்ச்சி யல்ல. பற்றுக்களை விலக்கி நிற்கும் உள்ளத்து நிலையே. ஞானம் வேறு, படிப்பு வேறு. உயிரை அடிமைப் படுத்தி நிற்கும் மோக மும் பற்றும் இருந்தபடியே நிலைத்திருந்து எவ்வளவு நூல்களை எந்தப் பாஷையில் படித்துப் பிறருக்கு உரைக்கும் வல்லமை பெற்றாலும் அது மெய்யறிவு ஆகாது.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்"

என்ற உண்மையை அறிந்து படிப்படி யாகப் பற்றுக்களை நீத்தலே அறிவு. ஞானம் என்பது அவா அறுத்தலின்ன்றி வேறு ஒரு குறுக்கு வழியல்ல. அவா அறுத்த மனோநிலைக்கே ஞானம் என்று பெயர். விடுதலை அடைவதற்கு ஞானம்

---

अग्रे वह्निः पृष्ठे भानुः
रात्रौ चुबुकसमर्पितजानुः ।
करतलभिक्षस्तरुतलवासः
तदपि न मुञ्चत्याशापाशः ॥

कुरुते गङ्गासागरगमनम्
व्रतपरिपालनमथवा दानम् ।
ज्ञानविहीनः सर्वमतेन
मुक्तिं भजति न जन्मशतेन ॥

என்பது சூட்சுமமான ஒரு மார்க்கம் என்று சிலர் எண்ணுகிறார்கள். அவ்வாறு எண்ணுதல் தவறு. அவா அறுத்தால் ஞானம் தனக்குத்தானே உதயமாகும். அழுக்கு அடியில் படிந்து நீர் தெளிவு அடைதல் போல் அறிவு என்னும் தெளிவு உள்ளத்தில் உண்டாகும். ஞானத்துடன் கங்கா ஸ்நானம் செய்; ஞானத்துடன் சேது ஸ்நானம் செய்; ஞானத்துடன் விரதங்கள் காத்துவா; ஞானத்துடன் தானங்கள் செய் என்கிறார் சங்கரர். உடலின் மூலம் செய்யப்பட்ட கடமைகளும் விரதங்களும் பயன் பெற வேண்டுமானால் உள்ளம் உடலுடன் கலந்து வேலை செய்ய வேண்டும். அதற்கு அறிவு வேண்டும்.

பள்ளிக்கூடத்தில் நூல்கள் நெட்டுருச் செய்து பாஸ் செய்யும் அறிவுக்குப் பரீட்சைகள் உண்டல்லவா? அந்தப் பரீட்சையில் ஞாபக சக்தியை வைத்துத் தேறி விடலாம். சங்கரரும் கீதையும் சொல்லும் அறிவுக்கு ஞாபக சக்தி ஒரு பிரயோஜனமுமில்லை. இலக்கணப் பிழையின்றித் தத்துவார்த்தம் பேசுவதும் பயனில்லை. வாழ்க்கை எப்படி நடத்துகிறாய்? துக்கத்தை எப்படித் தாங்குகிறாய்? இந்தப் பரீட்சையே அந்த அறிவுக்குப் பரீட்சை.

# அதோ நிபுணர், ஜாக்கிரதை!

**அ**ன்றைக்குத் தெரு வழியாக ஒருவர் சட்டையைத் திருப்பிப் போட்டுக் கொண்டு பொத்தான்கூடப் போட்டுக் கொள்ளாமல் போய்க் கொண்டிருந்தார். இப்படி எத்தனையோ பேர்தான் தினம் போகிறார்கள்? நம் நாட்டில் இது என்ன அதிசயம் என்

மார்க்கெட்டில் வாழைக்காய்க் கடைக்காரனிடம் கூட்டமாக இருந்தது. கத்திரிக்காய்க் கடைக்காரனிடம் கூட்டமிருந்தது. உருளைக்கிழங்கு கடையில் கூட்டமிருந்தது. இப்படி எங்கே கண்டாலும் கூட்டமாக இருக்க ஒரே ஒரு கடையில் மட்டும் கூட்டமில்லை.

# இன்றே பாருங்கள்!

அஸோஸியேடட் புரொடக்ஷன்ஸ்

# அம்மா

தத்ரூப நடிப்புடன் கூடிய உன்னதப் படம்.

| | | | |
|---|---|---|---|
| சென்னை | ஸ்ரீ கிருஷ்ண<br>சித்ரா<br>ஸயானி | கள்ளிக்கோட்டை | ராதா |
| | | எர்ணாகுளம் - | லக்ஷ்மண் |
| | | திருச்சூர் - | ஜோஸ் |
| பெங்களூர் | ஸ்வஸ்திக்<br>நியூ அபெரா<br>பாரத் | தெல்லிச்சேரி - | முகுந்த் |
| | | கண்ணனூர் - | ஜவஹர் |
| | | பாலக்காடு - | நியூ தியேட்டர் |
| மதுரை - | சந்திரா | கோயமுத்தூர் - | கர்னடிக் |
| திருச்சி - | ராஜா | சேலம் - | பாலஸ் |
| மைசூர் - | ராஜ்கமால் | ஈரோடு - | ஸ்டார் |
| ராபர்ட்ஸன்பேட்டை | கிருஷ்ண | பொள்ளாச்சி - | செல்லம் |
| வேலூர் - | தாஜ் | திருநெல்வேலி - | பாபுலர் |
| தஞ்சாவூர் - | ஸ்ரீ கிருஷ்ண | தென்காசி - | பாக்யலக்ஷ்மி |
| கும்பகோணம் - | விஜயலக்ஷ்மி | புதுச்சேரி - | கமர்ஷியல் |
| கரூர் - | டாக்கி டாக் | காஞ்சிபுரம் - | ராஜா |
| நாகர்கோவில் - | கிருஷ்ண | சித்தூர் - | குருநாத் |
| திருவனந்தபுரம் | ஸ்ரீ குமார் | திருப்பாபுலியூர் - | நியூ சினிமா |
| கோட்டயம் - | ராஜ்மஹால் | திருவாரூர் - | பேபி |
| ஆலப்புழை - | கோஸ்டல் | கூனூர் - | கணேஷ் |
| | | செங்கோட்டை - | ஸ்ரீ பத்மநாபா |

# நீங்களே சொல்லுங்கள் !

ஐயா, ஊர் பெயர் தெரியாத உத்தமரே! உமக்கு வணக்கம்! சாம்புவின் தொல்லையிலிருந்து விடுதலை வாங்கித் தந்த மகானுபாவரே, உமக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்.

இது என்ன கூத்து என்று நீங்கள் வியக்கலாம். நீங்கள் என்றைக்காவது சாம்புவுடன் எந்த க்ஷேத்திரத்துக்காகவாவது போய் இருக்கிறீர்களா! எந்தப் புண்ணிய தீர்த்தத்துக்காவது போய் இருக்கிறீர்களா! எந்தச் சரித்திரப் புகழ் பெற்ற இடத்திற்காவது போயிருக்கிறீர்களா! அப்படிப் போயிருந்தால் தெரியும் சாம்புவின் தொண தொணப்பு, தொல்லை என்பதன் பொருள்!



நான் என் காரியாலயத்துக்குப் பத்து நாள் 'லீவ்' போட்டுவிட்டு வெளியூருக்குப் போகிறேன் என்றால், எப்படியோ சாம்புவின் மூக்கில் வியர்க்க ஆரம்பித்து விடும்!

"டேய் லீவ் போட்டிருக்கிறாயாமே! எங்கே போகப் போகிறாய்! என்ன செய்யப் போகிறாய்!" என்று கேட்க ஆரம்பித்து விடுவான்.

நான் எங்கே போனால் என்ன! என்ன செய்தால் இவனுக்கு என்ன! கேட்கிறேன்! ஆனால் அவன் விட மாட்டான்!

"ராமேசுவரம் வரை போய் வரலாம் என்று பார்க்கிறேன்" என்றால், "அப்படியா நானும் வருகிறேன். நீ முன்னே பின்னே போனதில்லையல்லவா! நான் இது வரை இருபது தடவை போயிருக்கிறேன். இருபத்தோராவது தடவையாக உன்னுடன் வருகிறேனே! என்ன அதனால் நஷ்டம்! அதற்கு மாறாக உனக்குத்தான் சௌகரியம், அங்கே காட்ட வேண்டிய இடமெல்லாம் காண்பித்து, குளிக்க வேண்டிய புண்ணிய தீர்த்தங்களில் எல்லாம் குளிப்பாட்டி அழைத்து வருகிறேன்" என்று தொத்திக் கொண்டு விடுவான். வேண்டாம் என்றால் கூடக் கேட்க மாட்டான்.

வந்து தொலைகிறான் என்று விட்டுத் தொலைப்போம் என்றாலும் கஷ்டம். அவன் அந்த அந்த ஊர்களைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள், ஒவ்வொரு தடவை வந்திருந்த போதும் ஏற்பட்ட அனுபவங்கள் எல்லாம் நம் காது புளிக்கச் சொல்லித் தீர்ப்பான். நாம் கேட்காதது போல், நமக்குப் பிடிக்காதது போல் எவ்வளவு பாவனை செய்தாலும் அவனிடமிருந்து தப்ப முடியாது. சாம்பு சொல்லியே தீர்ப்பான்!



ஒரு சமயம் நான் மதுரைக்குப் போயிருந்தேன். நான் போயிருந்தேன் என்றால், இந்த இடத்தில் நானும் சாம்புவும் போயிருந்தோம் என்று ஊகித்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

மதுரை மீனாக்ஷியம்மன், திருப்பரங்குன்றம், அழகர்மலை முதலிய இடங்களுக்கெல்லாம் போயிருந்தோம். சாம்பு எனக்கு ஒவ்வொரு கோயிலைப் பற்றியுள்ள புராணக் கதை, அந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமான் மீது யார் யார் பக்தி புஞ்சிதர்களாகப் பாடியிருக்கிறார்கள், எந்த மன்னர் காலத்தில் தோன்றியது, எந்த நூற்றாண்டில் பிரகாரம் கட்டப்பட்டது, எந்த சகாப்தத்தில் கோபுரம் எடுக்கப்பட்டது, எத்தனைபேர் வேலை செய்தார்கள், எவ்வளவு ஆஸ்தியிருக்கிறது என்பன போன்ற விஷயங்கள் எல்லாம் சாம்பு விடாமற் சொல்லிக் கொண்டு வந்தான். என் காது புளித்து விட்டது.

"இதெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமல்லவா!" என்று நீங்கள்கூடக் கேட்கலாம். வாஸ்தவம்; ஆனால் எதற்கும் ஒரு அளவிருக்கிறதல்லவா! அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷமல்லவா!

நானே தவித்துக் கொண்டிருந்தேன். சாம்பு விடுகிற வழியாக இல்லை. ஒரு தூண் எதிரில் அழைத்துக் கொண்டு போய் நிறுத்தினான். அந்தத் தூணில் ஒரு மனித உருவம், கைகூப்பிய வண்ணம் செதுக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்து சாம்பு, "இது யார் தெரியுமா!......இவர்தான் திருமலை நாயக்கர்......" என்று ஆரம்பித்தான்.

அப்போது, அந்த வழியாகப் போய்க்கொண்டிருந்தார் ஒரு ஆண்டிப் பண்டாரம். அவருடைய மொட்டையடித்த தலையில் ருத்ராக்ஷம் சுற்றப்பட்டிருந்தது. நெற்றியில் திருநீறு அலங்கரித்தது. கையில் சாம்பிராணிப் புகைபோடும் கம்பு இருந்தது. அதிலிருந்து சுகமான வாசனையுடன் சாம்பிராணிப் புகை வந்து கொண்டிருந்தது. அவர் உதடுகள் "சாம்ப சதாசிவ; சாம்ப சதாசிவ" என்ற மந்திரத்தை முணு முணுத்தது. ஆனாலும் அவருடைய கவனம் நாற்புறமும் சென்று கொண்டிருந்தது. எங்கள் அருகில் நெருங்கியதும், சாம்பு கூறியதைக் கேட்டார். உடனே. "த்ஸொ த்ஸொ அது திருமலை நாயக்கன் இல்லைங்க! பதினைஞ்சு வருஷத்துக்கு முன்னாலே, சித. கபெ. பழ. ராம. அ. உ. சி. கரு. கருப்பன் செட்டியார் என்று ஒருவர் இந்தக் கோவிலில் பத்து லக்ஷ ரூபாய் செலவழித்துத் திருப்பணி செய்தார். அவருடைய உருவச் சிலைங்க......" என்றார். அதைக் கேட்டதும் என் வயிற்றில் பால் வார்த்தாற் போலிருந்தது; என் உள்ளத்தில் எழுந்த உவகை கொஞ்ச நஞ்சமில்லை. அந்த மகிழ்ச்சியில் என்ன செய்தேன் தெரியுமா! சாம்புவுக்குத் தெரியாமல், என் மணிபர்ஸிலிருந்து ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தேன். அந்தப் பண்டாரத்துக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அப்படியே கண்களை அகல விரித்தபடியே நின்றார்! நானும் சாம்புவும் பதில்பேசாமல் மேலே விடு விடு என்று நடந்தோம்! அவன் முகத்தில் ஈயாடவில்லை. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு சாம்புவின் அளப்புகளும் கணிசமான அளவு குறைந்து விட்டது.

இப்படி எனக்கு விடுதலை வாங்கித் தந்த மனுஷனுக்கு நன்றி செலுத்தாமல், இந்தக் கட்டுரை எழுத ஆரம்பித்திருந்தால் நியாயமாக இருந்திருக்குமா, நீங்களே சொல்லுங்கள்! —என். வி. என்.



# அமர கீதம்!

ஆசிரியர்: ஜகன் நாத் தாக்கர்
மூலக் கதை: உருது
மொழி பெயர்ப்பு: வாஞ்சி.

நான் முதன் முதலாக மேஜர் ரெபோர்டை ஒரு யாத்ரீகர் விடுதியில் சந்தித்தேன்.

அந்த விடுதி, காஷ்மீரத்தில் வானளாவி நிற்கும் மலையில் ஸ்படிகம் போல் ஓடும் நீரோடைக்கு அருகில் இருக்கிறது. அந்தப் பிரதேசத்தில் உள்ள அபூர்வமான மிருகங்களை வேட்டையாட விரும்புவோர்தான் அங்கு அதிகமாக வருவார்கள்.

நான் மேற்படி விடுதிக்குச் சென்ற போது சூரியன் ஹிமய மலைச் சிகரங்களுக்கு அப்பால் சென்று மறைந்து கொண்டிருந்தான். அந்தச் சிகரங்களின் பிரும்மாண்டமான நிழல்கள் சிறிது நேரத்தில் உலகம் முழுவதையும் கவிந்து கொள்ளப் போகும் இருளைப் போல் தோன்றியது.

அன்று அந்த விடுதியில் என்னைத் தவிர மேஜர் ஒருவர் தான் இருந்தார். அச்சமயம் அவர் விடுதியில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தார். ஒரு சிப்பாய்க்குரிய முறையில் அவர் என்னை வரவேற்றார். அவரை நான் முதல் தடவையாகச் சந்தித்த மாத்திரத்தில் அவரது அன்பும் மரியாதையும் என் மனத்தைக் கவர்ந்தன.

சிறிது நேரத்தில் இருவரும் மனம் விட்டுப் பேசத் தொடங்கினோம். மேஜர் ரெபோர்டின் வாழ்க்கையில் பெரும் பகுதி போர்க்களத்திலேயே கழிந்தது என்பதை அவர் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டேன்.

மேஜர் ரெபோர்ட் இரண்டு உலக மகா யுத்தங்களிலும் ஈடுபட்டவர். யுத்தத்தின் பயங்கரங்களையும் வெற்றி தோல்வியால் உண்டாகும் உணர்ச்சிகளையும் அவரது முகபாவங்கள் காட்டின. அதே சமயம் யுத்தம் என்ற வார்த்தையே அவருக்கு எவ்வளவு வெறுப்பைக் கொடுக்கிறது என்பதையும் தெரிந்து கொண்டேன்.

* * *

இரவு சாப்பாட்டுக்குப் பிறகு நாங்கள் குளிர் தாங்க முடியாமல் நெருப்புக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு பல விஷயங்களைப் பற்றியும் பேசலானோம். அப்போதுதான் மேஜர் ரெபோர்டைப் பற்றி நான் நன்கு அறிந்து கொள்ளும் சந்தர்ப்பம் கிடைத்தது.

மேஜர் சரளமான சுபாவம் உடையவராதலின், அவர் தம்முடைய அனுபவங்களைத் தங்கு தடையின்றி என்னிடம் கூறினார். நான் கூறிய விஷயங்களையும் சிரத்தையுடன் கேட்டார்.

காடுகளில் உள்ள மிருகங்களைப் பற்றியும் அவைகளை வேட்டையாடுவது பற்றியும் நாங்கள் மிகவும் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தோம்.

பிறகு மனிதர்களைப் பற்றி நான் பேசத் தொடங்கிய போது, அவரது உற்சாகம் திடீரென்று குறைந்ததை நான் கவனித்தேன். அவரது முகத்தில் அப்போது ஒரு விதமான சோகம் படர்ந்ததையும் நான் கவனிக்கத் தவறவில்லை.

அவரது முகத்தில் ஏற்பட்ட மாறுதலை நான் தெரிந்து கொண்டேன் என்பதை அவரும் அறிந்து கொண்டார். உடனே நீண்டதொரு பெருமூச்சு விட்டார்.

"மனிதர்களையே வேட்டையாடும் அக்கிரமத்தை, அநீதியை, பயங்கரத்தை எண்ணும்போதெல்லாம் என் மனம் வேதனை தாங்க முடியாமல் துடிக்கிறது" என்றார் மேஜர் ரெபோர்ட்.

வாழ்நாள் முழுதும் மனிதர்களை வேட்டையாடுவதையே, அதாவது யுத்தம் செய்வதையே தமது தொழிலாகக் கொண்ட அவர் அவ்விதம் கூறியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரது செய்கைக்கும் பேச்சுக்கும் முரண்பாடாகவும் தோன்றியது.

என் எண்ணத்தை ஊகித்துக்கொண்டவர் போல் அவர் தமது மன நிலையை விவரிக்க ஆரம்பித்தார்.

"வேட்டையாடுவதிலே ஒரு காலத்தில் எனக்கு இருந்த ஆனந்தம் அற்ப சொற்பமல்ல. என் துப்பாக்கியிலிருந்து தோட்டாக்கள் ஊடுருவிப் பாய்ந்ததால் படுகாயமுற்ற மிருகம் துடி துடித்து உயிருக்குப் போராடும் போது, நான் பரவசம்

அடைவேன். ஓர் உயிருக்கு முற்றுப் புள்ளி வைக்கும் சக்தி எனக்கு இருப்பதைக் குறித்துப் பெருமை அடைவேன். யாருடைய மனத்துக்கும் கைக்கும் எட்டாத காலத்தையே நான் ஒரு விநாடியில் வென்று விட்டதாக எனக்குத் தோன்றும்.

எதிரிகளின் உடல்களிலிருந்து உதிரம் பெருகுவது என் மனதில் சிறிதளவும் பச்சாத்தாபத்தையோ வேதனையையோ உண்டாக்கியதில்லை.

மனிதரையோ, மிருகங்களையோ இரக்கமின்றிச் சுட்டுக் கொல்வதில் எனக்குள்ள துணிச்சலும் உணர்ச்சியற்ற தன்மையும் தான் நான் சீக்கிரத்தில் உயர்ந்த பதவியை அடைவதற்கு எனக்குத் துணையாக இருந்தன!

சாதாரணமாக ஒருவர் மற்றொருவரைக் கொன்றால் அது கொலைக் குற்றம் ஆகிறது. கொலைக் குற்றவாளி தூக்குத் தண்டனை விதிக்கப்படுகிறான். ஆனால் யுத்த காலத்திலோ நூற்றுக் கணக்கானவர்களைக் கொன்று குவிப்பது குற்றமாகக் கருதப்படுவதில்லை. அதற்கு மாறாக அது மிகவும் பாராட்டத் தக்க செய்கையாகி விடுகிறது! அவ்வாறு செய்வோர் புகழ், பெருமை, வெகுமதி, உயர் பதவி முதலிய எல்லா நலன்களையும் அடைகின்றனர்.

முதலாவது, இரண்டாவது மகா யுத்தங்களில் நான் எவ்வளவோ கொலைகள் செய்திருக்கிறேன். நான் ஒரு கொடிய கொலைகாரன் என்பது அப்போதெல்லாம் எனக்குத் தெரியவில்லை.

சாதாரண சிப்பாயாக இருந்த நான் இரக்கமின்றி எண்ணிக்கையற்ற கொலைகள் புரிந்ததன் பலனாக வெகு சீக்கிரத்தில் மேஜர் பதவிக்கு வந்து விட்டேன். அவ்வாறு கொலை செய்வதை நான் தேசத்துக்கும் தேச மக்களுக்கும் செய்யும் கடமையாகக் கருதினேன்; உலகத்தை உத்தாரணம் செய்வதில் நானும் பங்கு எடுத்துக் கொள்வதாகப் பெருமிதம் கொண்டேன்.

நான் உயிர்களை அழிப்பதன் மூலம் உயிர்களைக் காப்பாற்ற முயன்றேன்! விழித்துக் கொண்டிருக்கும் போதும் தூங்கும்போதும் உயிர்களைக் கொல்லவே என் மனம் திட்டமிட்டு வந்தது!"

* * *

இதுவரையில் உரத்த குரலில் படபடப்பாகப் பேசிவந்த மேஜர் இப்போது குரலைத் தணித்துக் கொண்டார். தம்மைத் தாமே சாந்தப்படுத்திக் கொள்பவர்போல் தோன்றியது. மேலும் பேசத் தொடங்கினார்:

"ஆனால், ஒரு நாள் திடீரென்று என் மனத்தில் அதுவரையில் நான் கண்டறியாத ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. படுகாயமுற்று இறக்கும் தறுவாயிலிருக்கும் ஆடவர், பெண்கள், சிசுக்கள் முதலியோரின் தீனக் குரல் என் செவிகளில் கேட்டது. காயமடைந்த ஒரு பெண்ணின் வேதனைக் குரல் என் மனைவியின் குரலைப்போல் என் காதில் ஒலித்தது. என்னால் சுடப்பட்ட ஒருவருடைய குழந்தையின் அழுகைக் குரல் என் செவிகளில் ஒலித்தது. அந்தக் குரல் என் சொந்தக் குழந்தையின் குரலைப் போல் இருந்ததைக் கண்டு நான் திடுக்கிட்டேன்.

அதாவது என்னால் சுடப்பட்டு மாண்டவர்கள் வேதனையினால் துடிப்பதும், அலறுவதும், விம்முவதும் என்னுடைய நெருங்கிய உற்றார் உறவினர் துடிப்பது போலவும், அலறுவது போலவும், விம்முவது போலவும் எனக்குத் தோன்றின!

என் ஹிருதயத்தில் தோட்டாக்கள் பாய்ந்து விட்டதுபோல் அந்தக் கூக்குரல்கள் என் ஹிருதயத்தைப் பிளந்தன.

காயமடைந்து குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடந்து துடிப்பவர்கள் நிறைந்து கிடந்த போர்க்களத்துக்கும், நாங்கள் முகாம் போட்டிருந்த இடத்தை அடுத்து இருந்த அமைதியான கிராமத்துக்கும் எவ்வளவு வேற்றுமை!

ஜீவன் ததும்பி நின்ற அந்தக் கிராமத்தின் அமைதியையும், மேற்படி கிராம மக்களின் சுறுசுறுப்பையும் சகோதர பாவத்தையும் அன்பையும் வர்ணிப்பது இயலாத காரியம்.

ஆனால், அதற்கு நேர்மாறாகப் போர்க்களத்தில் பீரங்கிகளின் பேரிடி ஓசை மரணத்தையும் அழிவையும் துவேஷத்தையும் வரவேற்றது.

பீரங்கிகளின் ஓசை என் காதுகள் செவிடாகும்படி செய்தது. ஆனால் கிராமத்தின் இயற்கை எழிலோ வெளிப் புத்துயிரையும் உத்வேகத்தையும் அளிப்பதாக இருந்தது.



யுத்தம் என்றால் மரணம் தான், அழிவு தான் என்பதை உணர்ந்தேன். சிருஷ்டிக்கும் தன்மை, பாதுகாக்கும் தன்மை யுத்தத்துக்கு இல்லை என்பதையும் அறிந்தேன்.

யுத்தம் மரணத்தைத் தவிர மற்றெதையும்



பொய்யாகச் செய்து விடுகிறது; இயற்கையின் இணையற்ற அழகையும், சகோதர பாவத்தையும், அன்பையும் கூடப் பொய்யாக்கி விடுகிறது!"

• • •

மேஜர் ரெபோர்ட் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். மறுபடியும் மெதுவாகத் தமது வரலாற்றைக் கூற முற்பட்டார்.

"ஒரு நாள் என் முகாமுக்குச் சிறிது தூரத்திலிருந்து இனிய கீதம் ஒன்று காற்றிலே மிதந்து வந்தது. சிறிது தூரத்துக்கு அப்பால் வயலில் வேலை செய்துகொண்டிருந்த ஒரு பெண் இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தாள். போரின் பேரிடி ஓசைக்கும் அந்த இனிய கீதத்துக்கும் எவ்வளவு மகத்தான வேற்றுமை! ஆஹா!

அந்த இனிய கீதத்தைக் கேட்பதற்காகவே நான் வாழ்க்கை முழுதும் காத்துக் கொண்டிருந்ததுபோல் எனக்குத் தோன்றியது. வெகு காலமாக என் இருதயத்தில் பொங்கிக் கொண்டிருந்த இனந் தெரியாத தாபத்தை அந்த கீதம் தணிப்பது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. சிக்கல்கள் நிறைந்த வாழ்க்கையின் புதிர்களையெல்லாம் அவிழ்த்துத் தெளிவாகக் காட்டும் சக்தி அந்த அற்புத கீதத்துக்கு இருப்பது போலவும் எனக்குத் தென்பட்டது.



கதிர் முற்றியிருந்த சோள வயல்களுக்கு மத்தியில் இருந்த அந்தப் பெண்ணின் குரலே என் மனத்துக்கு அவ்வளவு இன்பத்தைக் கொடுத்தது. அவள் யௌவனமும் உற்சாகமும் உருவெடுத்து வந்தவள்போல் காணப்பட்டாள். அவளது முகத்தின் பிரகாசத்தைச் சொல்லி முடியாது. அவளுடைய கண்களிலிருந்து தாயின் அன்பு வழிந்து கொண்டிருந்தது.

இந்தச் சம்பவம் 1943-ல் நடந்தது. அப்போது நாங்கள் பர்மாவைச் சேர்ந்த ஒரு மலைக் கிராமத்தில் முகாம் போட்டிருந்தோம். எங்கள் பிரிவுப் படையை நாலா புறங்களிலும் ஜப்பானியத் துருப்புகள் சூழ்ந்து கொண்டிருந்தன. எங்களுடைய உதவிக்கு வெளியிலிருந்து துருப்புகள் வந்தாலன்றி எங்களில் எவரும் உயிர் தப்புவது முடியாத காரியம் என்ற பயங்கர நிலைமை ஏற்பட்டிருந்தது.

இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில்தான் நான் அந்தப் பெண்ணின், பாஷாவின் இனிய குரலைக் கேட்டேன். அதிலிருந்துதான் என் வாழ்க்கையில் எதிர்பாராத, புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டது. என் சம்பந்தப்பட்ட வரையில் அன்றிருந்துதான் ஒரு புதிய உலகில் என்னுடைய புதிய வாழ்க்கை ஆரம்பமாயிற்று.

என்னைப் பரவசப்படுத்திய அந்த கீதத்தைக் கேட்ட பின்தான், யுத்தத்தின் பயங்கரமான தன்மையை நான் உணர்ந்துகொள்ள முடிந்தது.

யுத்தத்தில் வெற்றிபெறுவதுதான் வாழ்க்கையின் இலட்சியம், ஆனந்தத்தின் எல்லை என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்த எனக்கு அப்போதுதான் முதன் முதலாக யுத்தத்தில் வெறுப்பு உண்டாகத் தொடங்கியது.

பாஷா பாடிக் கொண்டிருந்த பிரதேசத்திலே அதிசீக்கிரத்தில் போர் நடக்கப்போவது நிச்சயம். அவ்வாறு யுத்தம் நடந்தால் பாஷாவின் கதி என்ன ஆகும்! அந்தக் கொடிய யுத்தத்தில் அவள் இறக்கப்போவது நிச்சயம்.

அவள் இறப்பதற்கும் மானிட வர்க்கமே இறப்பதற்கும் வேற்றுமை இல்லை என்று எனக்குத் தோன்றியது.

என்னைப் புது மனிதனாக்கிய அவளுடைய கீதத்துக்கு யுத்தம் முற்றுப்புள்ளி வைத்துவிடுமே என்று உருகினேன்.

பிறகு புஷ்பங்கள் மலராமல் நின்றுவிடும்; ஓடைகளில் தண்ணீர் வற்றிவிடும்; காற்றில் கீதம் மிதந்து வராது. ஆம், மரணம் ஆதிக்கம் செலுத்தும் இடத்தில் மலருக்கும் கீதத்துக்கும் இடம் ஏது!"

• • •

"இவ்விதமாக என் சிந்தனைகள் ஓடிக் கொண்டிருந்தபோதுதான் நான் வாழ்க்கையின் ஆதி அந்தமில்லாத இரகசியத்தைக் கண்டு பிடித்தேன்.

'பாஷா' என்று அவளை மெதுவாகக் கூப்பிட்டேன்.

சாந்தமே, அமைதியே உருவெடுத்த அவள் என்னைத் திரும்பிப் பார்த்தாள்.

'உன் கீதம் அறிவித்த செய்தியை நான் இனி உலகம் முழுவதும் சென்று பிரசாரம் செய்வேன். இனிமேல் என் துப்பாக்கியிலிருந்து ஒரு தோட்டா கூட வெளிக் கிளம்பாது. உன்னுடைய இனிய கீதத்தின் எதிரொலி எட்டுத் திசைகளிலும் கேட்கும்படி செய்வேன்' என்றேன்.

அவள் சிரித்தாள். அவள் இருக்கும் பயங்கரமான நிலைமையும் என் மனதில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதலையும் அவள் அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

ஜப்பானியர்களோ மணிக்கு மணி எங்களைச் சூழ்ந்து நெருங்கிக் கொண்டிருந்தனர்!

'பாஷா! ஜீவன் ததும்பும் இந்த அற்புதமான கீதத்தை எங்கிருந்து நீ கற்றுக் கொண்டாய்!' என்று கேட்டேன்.

'இந்த வயல்களைக் கேட்டுப் பாருங்கள்; அவைகள் சொல்லும்' என்றாள். அவள் அருகில் ஒரு சிறுவன் நின்று கொண்டிருந்தான். பாஷா மேலும் தொடர்ந்து ஏதோ சொல்ல முற்பட்டாள்.

'இதோ இந்தக் குழந்தையைப் பாருங்கள். இவனுக்கு ஏழு வயதாகிறது. இவனுடைய தகப்பனார் போரில் இறந்து விட்டார். தானும் போரில் இறக்க எப்போது சந்தர்ப்பம் வரும் என்று இவன் ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு இந்த உலகில் உற்றார் உறவினர் வேறு யாருமே இல்லை' என்றாள் பாஷா.

'இவ்வாறு எத்தனை குழந்தைகளைப் பராமரிக்கும் பொறுப்பை நீ ஏற்றுக் கொள்ளப் போகிறாய்!' என்று கேட்டேன்.

'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்! இவனைப் போல் அநாதையான குழந்தைகள் பலர் இருக்கிறார்களா!' என்றாள் பாஷா ஆச்சரியத்துடன்.

பாவம்! யுத்தம் என்றால் எவ்வளவு கொடியது என்பது அவளுக்கு எப்படித் தெரியும்! யுத்தத்தினால் ஆயிரக் கணக்கான குழந்தைகள் அநாதைகளாகி யிருக்கிறார்கள்; ஆயிரக் கணக்கான பெண்கள் விதவைகளாகி யிருக்கிறார்கள். இதெல்லாம் அவளுக்குத் தெரியாது. அந்தக் கிராமத்தில் யுத்தம் நடக்கும்போது அல்லவா அதன் கொடுமையையும் பயங்கரத்தையும் அவளால் அறிந்து கொள்ள முடியும்!

யுத்தத்தில் அந்தக் கிராமம் என்ன பாடு படப் போகிறது என்பதை எண்ணியபோது என் உடல் நடு நடுங்கியது.

புன்முறுவலுடன் சாந்தமாக பதில் அளித்துக் கொண்டிருந்த பாஷாவின் முகத்தில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவள் உள்ளத்தில் எழுந்த வேதனையை முகம் பிரதிபலித்தது.

'இந்தப் பாழும் யுத்தம் எதற்காக ஏற்படுகிறது! இது ஏற்பட்டுத்தான் தீர வேண்டுமா!'

பாஷா கேட்ட இந்தக் கேள்விக்கு நான் என்ன பதில் கூறுவது! பேசாமல் இருந்தேன். அவள் உணர்ச்சி ததும்ப மேலும் சொன்னாள்.

'இது மிகவும் அழகான கிராமமாக இருந்தது. ஆனால் யுத்தம் உண்டானதிலிருந்து இந்தக் கிராமத்தில் இருந்த இளைஞர்களில் பலரும் போர் முனைக்குச் சென்று விட்டார்கள். இங்கு முன்பிருந்த மகிழ்ச்சியும் உற்சாகமும் இப்போது மறைந்து விட்டன. இப்போது எவ்வளவு விளைச்சல் விளைந்தாலும் எல்லாவற்றையும் யுத்த அரக்கன் விழுங்கி விடுவது போல் தோன்றுகிறது. எனவே, உணவுக் கஷ்டம் என்பதையே கண்டறியாத இந்தக் கிராமம் இப்போது உணவுப் பற்றாக் குறையினால் பீடிக்கப்பட்டிருக்கிறது' என்றாள் பாஷா மூச்சு விடாமல்.

நான் வாயைத் திறக்காமல் ஊமையைப் போல் உட்கார்ந்திருந்தேன். பாஷாவுக்கு என்ன பதில் சொல்லுவதென்றே எனக்குத் தெரியவில்லை.

'இது உனக்கு உகந்த விஷயம் அல்ல. இதைப் பற்றி நீ கவலைப் படாமல் ஆனந்தமாகப் பாடிக் கொண்டிருப்பதுதான் உனக்கு ஏற்றது' என்றேன்.

அவள் மற்றொரு பாட்டுப் பாடினாள். 'இது இந்தக் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெண் அடிக்கடி பாடும் பாட்டு. அந்தப் பெண்ணின் காதலன் திடீரென்று அவளை விட்டு விட்டுப் போகும்படி நேர்ந்தது. யுத்தத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று அவனுக்குக் கட்டளை வந்து விட்டது. அவ்வாறு போனவன் பிறகு திரும்பி வரவேயில்லை' என்றாள் பாஷா.

பாஷாவின் மேற்படி பாட்டு அந்தச் சிறுமியின் காதலையும் சோகத்தையும் மனம் உருகப் பிரதிபலிப்பதாக இருந்தது."

* * *

"எதிர் பார்த்தது போல், சில நாட்களில் அந்தக் கிராமம் ஜப்பானியர்களால் கடுமையாகத் தாக்கப்பட்டது. எங்கள் பிரிவைச் சேர்ந்தவர்கள் வெகு உக்ரமாகப் போர் புரிந்தார்கள். நூற்றுக்கணக்கானவர்கள் பலியாயினர். கிராமம் தரை மட்டமாயிற்று.

கடைசியில் எங்களுக்கு உதவியாய்த் துருப்புகள் வந்து சேர்ந்தன. அதன் பலனாக ஜப்பானியர்கள் முறியடிக்கப்பட்டனர்.

இறுதியாக ஜப்பானியர் தோல்வியுற்றனர். நேச தேசங்கள் வெற்றி பெற்றன. ஆனால் இரு சாராரின் கைகளிலும் இரத்தக் கறை படிந்திருந்தது. யுத்த வெறியர்களும் சமாதானப் பிரியர்களும் ஒருங்கே மானிட வர்க்கம் அழிவதற்கு உதவி புரிந்தனர்!

போரில் நான் ஒரு கையை இழந்தேன். நான் ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவந்த பிறகு ஒரு வருஷம் கழித்து நேச தேசங்களுக்குக் கிடைத்த வெற்றி எதை யெல்லாம் சாதித்தது என்பதை நேரில் பார்ப்பதற்காக அந்தக் கிராமத்துக்குச் சென்றேன்.

மீண்டும் அங்கு குடியானவர்கள் வயல்களை உழுது கொண்டிருந்தார்கள். கிராமக் குடிசைகளை மறுபடியும் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

அந்தக் கிராமத்தைச் சேர்ந்த பெரும்பாலோரும் யுத்தத்தில் கொல்லப்பட்டனர் என்பதைத் தெரிந்து கொண்டேன். பாஷாவுக்கும் பாஷாவினால் பராமரிக்கப் பட்டு வந்த அநாதைச் சிறுவனுக்கும் அதே கதிதான்!

எந்த வயலில் நான் பாஷாவைச் சந்தித்தேனோ, அதே வயலை விலைக்கு வாங்கி அதில் விவசாயம் செய்வதென்று உறுதிகொண்டேன். மரணத்தைக் கொடுக்கும் சாதனமான துப்பாக்கியைத் தூர எறிந்து விட்டு, சிருஷ்டி சாதனமான கலப்பையைக் கையில் எடுத்துக் கொள்வது என்று உறுதி கொண்டேன்.

**இன்றைய உலகத்துக்குத் தேவைப் படுவது சிப்பாய்கள் அல்ல. விவசாயிகளும் தொழிலாளர்களும்தான். யுத்தத்தில் நான் கற்றுக் கொண்ட பாடம் இதுதான். பாஷாவின் அமரகீதம்தான் எனக்கு இந்த ஞானத்தைக் கொடுத்தது."**

உணர்ச்சிவசப் பட்ட மேஜர் ராபர்ட் மேற்படி கதையைக் கூறி முடித்தபோது, அவரது கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது. அதே சமயம் அவரது முகத்தில் ஒருவிதமான பிரகாசமும் அமைதியும் நிலவின.




விடியற்கால வேளை. ஜன்னல் வழியாக வீசிய குளிர் காற்று மைதிலியைச் சிலுசிலுக்கச் செய்தது. போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு திரும்பிப் படுத்தவள் சட்டென்று தூக்கம் கலைந்து விழித்துக் கொண்டாள். கண்களைச் சுழற்றிப் பார்த்தாள். அறையில் கவிந்திருந்த மங்கலான வெளிச்சத்தில் மறு கோடியில் கிடந்த கட்டிலைப் பார்த்தாள். அதில் அவளுடைய சித்தியைக் காணவில்லை. ஒரு விநாடியில் அவளுக்கு முதல்நாள் நடந்த சம்பவங்களெல்லாம் ஞாபகத்துக்கு வந்துவிட்டன.

விசுக்கென்று போர்வையை உதறிவிட்டுச் சட்டென்று கீழே இறங்கினாள் மைதிலி. கலைந்திருந்த புடவையைச் சரிப்படுத்திக் கொண்டு, அறைக் கதவைச் சாத்திக்கொண்டு சமையலறைக்குள் நுழைந்தாள்.

மின்சார விளக்கைப் போட்டுக்கொண்டு அவளுடைய சித்தி சண்பகம், சமையலறையில் தாறுமாறாகக் கிடந்த சாமான்களையெல்லாம் ஒழுங்கு பண்ணிக் கொண்டிருந்தாள். பரிசாரகன் இன்னும் எழுந்து வரவில்லை.

"சித்தி! இத்தனை அதிகாலையில் எதற்காக எழுந்து வரணும்! குளிர் ஒடுக்கிக்கொண்டு போகிறது! ரங்கன் எழுந்து வந்து எல்லாம் செய்யமாட்டானா? இப்பொழுது என்ன அவசரம்?" என்று கடிந்துகொண்டே உள்ளே வந்தாள் மைதிலி.

"ரங்கனுக்குத் தலைவலியாம்; இன்றைக்கு அவன் எழுந்திருக்கவே போவதில்லையாம்!" என்று சாந்தமாகச் சிரித்துக்கொண்டே சொல்லிய சண்பகம், அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த காப்பிக் கெட்டிலின் ஜலத்தைப் பில்டரில் கொட்டி மூடிவிட்டுப் பாலை எடுத்து அடுப்பில் வைத்தாள்.

"நம்ம லட்சணத்துக்கு ஏற்றாற்போல் அவனும் ஒருவன் கிடைச்சிருக்கான். ஒன்று விட்டொருநாள் அவனுக்கு ஏதாவது வியாதி வந்துவிடுகிறது" என்று அலுத்துக்கொண்டே முற்றத்துக் குழாயண்டை பல் தேய்க்கப் போனாள் மைதிலி.

அவள் திரும்பி வருவதற்குள் காப்பியைக் கலந்து வெள்ளி டம்ளரில் நிரப்பி வைத்திருந்தாள் சண்பகம்.

"மைதிலி! இதைக் கொண்டு போய் மாப்பிள்ளையிடம் கொடு" என்றாள் சண்பகம். ஒன்றும் பேசாமல் அதை வாங்கிக் கொண்ட மைதிலி, சண்பகத்தின் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள்.

"போ, நேரமாச்சு! மணி ஆறரை அடித்து விட்டது!" என்று அவசரப் படுத்தி மைதிலியை மாடிக்கு அனுப்பி வைத்தாள் சண்பகம். வெளிக்கு அவள் புன்சிரிப்போடு பேசியபோதிலும், தன் சித்தியின் மனத்திலிருந்த வேதனையை முதல்நாளிரவுதான் அறிந்துகொண்ட மைதிலி, காப்பி டம்ளரைக் கையில் ஏந்தியபடி வெறிச்சோடிய பார்வையுடன் மாடிப் படிகளில் ஏறிப்போனாள்.

நேற்றுவரையில் அகம்பாவம், துடுக்கு, ஆகியவைகளுக்கு இருப்பிடமாயிருந்த மைதிலி, ஒரே இரவில் அடியோடு மாறிவிட்டாள். காரணம்? சித்தி சண்பகத்தின் உள்ளமுருக்கும் சோகக் கதைதான்! 'ஒரு தடவை கேட்டால் மறக்கக் கூடியதா அது? இவ்வளவு துக்கத்தையும் மனத்தில் வைத்துப் புதைத்துக் கொண்டு, எல்லாரிடமும் சிரித்துப் பேசி, மணி விளக்கைப் போல் வீட்டில் வளைய வந்துகொண்டிருந்தாளே! அவளுடைய தியாகந்தான் எப்படிப் பட்டது? அவளல்லவா பெண்! பெண்ணா?— அத்தனையும் பத்தரைமாற்றுப் பசுந்தங்கமல்லவா சித்தி! நேற்று வரையில் அவளை விஷம்போல் வெறுத்துப் பகைத்தேனே!

என் புத்தியை என்னவென்று சொல்லுவது?" என்றெல்லாம் நினைத்தபடியே ஜகந்நாதனின் அறைக்குள் நுழைந்தாள் மைதிலி.

## 2

பெரிய சர்க்கார் வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்ட வரதராஜ ஐயங்காரின் செல்வப் பெண் மைதிலி. நாலு பிள்ளைகளுக்கப்புறம் ஒரே பெண். பெற்றவளும் என்றோ விட்டுவிட்டு இறந்துவிட்டாள். அய்யங்காரின் இளைய மனைவி சண்பகம், மைதிலியைக் காட்டிலும் ஒரு வயதுதான் பெரியவள். சண்பகம் நல்ல அழகு வாய்ந்தவள். மைதிலியும் நல்ல கட்டழகிதான். ஆனால் சண்பகத்தின் அழகுக்கு மைதிலியின் வனப்பு உறை போடக் காணாது என்று எல்லாரும் சொன்னார்கள். சண்பகத்தின் குணமும் அதற்கு மேல் உயர்ந்தது. காலக் கொடுமையும் வறுமைக் கொடுமையுமாக அவள் விஷயத்தில் சதி செய்து அறுபது வயதைத் தாண்டியவரான ஜில்லா நீதிபதி வரதராஜ ஐயங்காருக்கு அவளை வாழ்க்கைப் படுத்தின. அப்சரஸ் போன்ற சண்பகத்தின் வனப்பு மிகுந்த முகம், தன்னுள் எப்படிப்பட்ட துக்கத்தையும் சோகத்தையும் அடக்கிக் கொண்டிருந்ததோ, அது ஒருவருக்கும் இன்றளவும் தெரியாது. மைதீட்டிய கருவிழிகள் விட்டுவிட்டுப் பிரகாசிக்கச் சின்னஞ்சிறு சிவந்த இதழ்களில் சதா நெளிந்தோடும் புன் சிரிப்புடன் வீட்டுக்கு

...துடன் "மைதிலி! நீ இங்கே ஒரு மாசம் மட்டும் இருந்து விட்டுப் போகக் கூடாதம்மா!—நிறைய நாள் என்னோடு இருக்கணும்" என்று சொல்லிய படியே தன் கையிலிருந்த கனகாம்பரப் பூச்செண்டை அவள் தலையில் சூட்டப் போனாள். சட்டென்று அவளைத் தடுத்து,—"ஐய, எனக்குக் கனகாம்பரமே பிடிக்காது; அதிலே மணமா, குணமா, என்ன இருக்கு?" என்று கூறினாள் மைதிலி.

"ஓஹோ! அப்படியா? இந்தக் காலத்துப் பெண்களெல்லாம் கண்ணுக்கு அழகாயிருக்கிறதென்று இந்தப் பூக்களைத் தானே தலையில் வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறார்களென்று, உனக்கும் அதையே வாங்கிக் கொண்டு வந்தேன்! நீ கொஞ்சம் இந்த விஷயத்தில் மட்டும் பழைய நாளையப் பெண்ணென்பது எனக்குத் தெரியவில்லை" என்று கபடமில்லாமல் புன்சிரிப்புடன் சொல்லிவிட்டு, கையிலிருந்த புஷ்பச் செண்டை ஸ்வாமி படத்தின் மீது வைத்தாள் சண்பகம்.

மைதிலிக்கு அவளுடைய ஒவ்வொரு செய்கையும் பேச்சும் வெறுப்பைக் கொடுத்தன. சண்பகத்தை அவ்வீட்டுக்கு எஜமானியாகக் கொண்டு வந்து விட்ட தன் தந்தையை மனமார நிந்தித்தாள். சண்பகத்தின் விஷயமாகத் தன் மனத்தின் உணர்ச்சிகளைக் கூடுமானவரையில் வெளியில் காட்டவும் அவள் அஞ்சவில்லை. தன் சித்தியின் பெற்றோர் ஏழைக

னாயிருப்பதையும், அக்காரணத்தினால் அவள் தன் தந்தைக்கு இளையாளாக வாழ்க்கைப் பட்டதையும் அவள் தயக்கமில்லாமல் அடிக்கடி இடித்துக் கூறுவாள்.

ஆனால் பேதை சண்பகம் எல்லாவற்றையும் பதில் பேசாமல் சகித்துக் கொண்டு அவளிடம் மீண்டும் சிரித்துப் பேசுவாள்.

'வெறும் ஜடம்! உடம்பில் சூடு சுரணையே யில்லை!' என்று மனசில் எண்ணிக் கொள்ளுவாள் மைதிலி.

ஏற்கெனவே நொந்து போன உள்ளத்துடன் அவ்வீட்டுக்குள் நுழைந்தவள் சண்பகம். அவளும் எல்லாப் பெண்களையும் போல் மனித உணர்ச்சிகள் படைத்தவள்தானே! ஏழைப் பெற்றோரின் வயிற்றில் பிறந்தவள் என்ற காரணத்தால் உணர்ச்சியற்ற கட்டையாய் விடுவாளா என்ன? ஆனால் அவளுடைய உணர்ச்சிகள் நாள் தோறும் காலடியிற் போட்டு நசுக்கப்பட்டு வந்தமையால், அவள் யந்திரம் போல நடமாடிக் கொண்டிருந்தாள். பெற்றோரின் பெருங் கஷ்டத்தை நிவர்த்திக்கும் பேராவலால் தூண்டப்பட்டு, அறுபது வயது தாண்டிய கிழவருக்குக் கண்டோர் மயங்கும் தன் கட்டழகையும், அப்பொழுதே முகிழ் விரித்து, மலர்ந்து மணம் வீசும் தன் பருவத்தையும் தத்தம் செய்து, அவருக்கு மனைவியாகத் துணிந்தாள். பெற்றோரின் கஷ்டம் விடிந்தது. ஆனால் சண்பகத்தின் கஷ்டம்?—அவளுடைய மனம்தான் அறியும்! வெளியிற் சொல்லிக் கொள்ளக் கூடியதா, அந்தக் கஷ்டம்?

அங்கேயிருந்த ஒரு மாதமும் சித்தியைத் தன்னால் எவ்வளவு உபத்திரவிக்க முடியுமோ அவ்வளவும் செய்தாள் மைதிலி. சண்பகம் பேசுவதெல்லாம் குற்றம், செய்வதெல்லாம் குற்றம், எழுவதும் உட்காருவதும் கூடக் குற்றம்தான். ஒரே வாரத்தில் வீட்டிலுள்ள வேலைக்காரர்களுக்குக்கூட விஷயம் தெரிந்து விட்டது. "ஆனாலும் சின்ன அம்மாவுக்கு இந்த மாதிரி கொடூரம் வாணாம்!" என்று அவர்களெல்லாம் சண்பகத்துக்காகப் பரிந்து பேசி அங்கலாய்த்தார்கள். மைதிலியின் தமயன்மார் கூட ஒவ்வொரு சமயம் அவளுக்காகப் பரிந்து பேசினார்கள். ஆனால் மைதிலி அவர்களை ஒரே வார்த்தையில் அடக்கி விட்டாள். கிழவரான வரதராஜய்யங்காருக்கு மட்டிலும் இதெல்லாம் தெரியாது. சண்பகமும் அவருடைய காது வரைக்கும் எதையும் கொண்டுபோகவில்லை.

மைதிலியை அழைத்துப் போவதற்காக அவளுடைய கணவன் ஜகந்நாதன் ஊரிலிருந்து வந்தான். அன்று நேர்த்தியான விருந்து தயார் பண்ணியிருந்தாள் சண்பகம். ஆனால் பரிமாறுவதற்கு மட்டும் அவள் வரவில்லை. ரங்கன்தான் பரிமாறினான்.

மத்தியானத்துக்கு மேல் தந்தையின் அறைக்குள் நுழைந்த மைதிலி, "அப்பா! எனக்கு இரும்புப் பெட்டிச் சாவி வேண்டும்" என்றாள்.

"எதற்கம்மா?" என்று கேட்டபடியே கையிலிருந்த புத்தகத்தை மூடிவைத்தார் அவர். பெண்ணின் வேண்டுகோள் அவருக்கு ஆச்சரியமாயிருந்தது.

"இல்லை, அப்பா! கார்த்திகை வருகிறதோ இல்லையோ? — எனக்கு அம்மா ஏற்றி வைத்துக்கொண்டிருந்த வெள்ளி விளக்கு வேணும்; அதை எடுப்பதற்காகத்தான் இரும்புப் பெட்டிச் சாவி கேட்கிறேன்" என்றாள்.

"உனக்குத்தான் அதைக் காட்டிலும் பெரிய விளக்கு ஒரு ஜோடி பண்ணிக்கொடுத்திருக்கிறேனே!" என்றார் அவள் தந்தை.



"அவை இரண்டும் லட்சணமாயில்லை யென்று என் மாமியார் சொல்லுகிறார். மேலும் அம்மாவுடைய விளக்கு ஆகி வந்த விளக்காம். அதை எனக்குக் கொடுத்து விடுங்கள். இனிமேல் இங்கே அதை ஏற்றி வைக்கக் கூட யாரும் இல்லையே!" என்றாள் மைதிலி.

நிமிர்ந்து உட்கார்ந்தார் ஸ்ரீமான் வரதராஜ ஐயங்கார்.

"ஏன்? இப்பொழுதுதான் சித்தி இருக்கிறாளே!" என்றார்.

தூக்கிப் போட்டது மைதிலிக்கு; பொங்கி வந்த கோபத்துடன் முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் கீழே யிறங்கிப் போய் விட்டாள்.

* * *

புறப்படும் சமயம். மாடியில் ஜகந்நாதன் தலையைக் கைகளில் தாங்கியபடி உட்கார்ந்திருந்தான்.

அவனைச் சுற்றிலும் துணிமணிகளும் புஸ்தகங்களும் சிதறிக் கிடந்தன.

அவனெதிரே கையில் கசக்கிப் பிடித்திருந்த ஒரு கடிதத்துடன், அனல் கக்கும் விழிகளுடன் நின்றிருந்த மைதிலியின் உடல் ஆத்திரத்தால் நடுங்கியது. "ஏன் சும்மா இருக்கிறீர்கள்? — சித்தியுடன் ரொம்ப நாளாக இந்த நாடகம் நடக்கிறதாக்கும்! அதனால் தான் அவள் உங்களெதிரில் வரவேயில்லை! பேசவேண்டிய விஷயங்களை யெல்லாம் பேசித் தீர்க்கச் சமயம் கிடைக்காதென்று முன்னாலேயே எல்லா விஷயங்களையும் கடிதத்தில் எழுதி யனுப்பி விட்ட சாமர்த்தியத்தை மெச்சிக் கொள்ளத்தான் வேண்டும். மாயக்காரி!" என்று படபடவென்று ஆத்திரத்தில் பொரிந்து தள்ளினாள்.

இதைக் கேட்ட ஜகந்நாதன், "மைதிலி! ஏன் கூச்சல் போடுகிறாய்? அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்! உனக்கே எல்லாம் விளங்கிவிடும்" என்று கூறிவிட்டு யந்திரம் போல் எழுந்து துணிகளையும் புஸ்தகங்களையும் பெட்டியில் வைக்கலானான்.

"ஆமாம்; படிக்கத்தான் போகிறேன். படித்து விட்டு இதை அப்பாவுக்கும் காட்டி விட்டு உங்களுடைய வண்டவாளத்தை ஊருக்கெல்லாம் தெரியப்படுத்தணும்! அப்போது தான் என் ஆத்திரம் அடங்கும்!" என்று கொடூரமாகக் கூறி விட்டு மைதிலி கையிலிருந்த கடிதத்தைப் பிரித்துப் படித்தாள்.

***ஸ்ரீ ஜகந்நாதன் அவர்களுக்கு,***

***கேவலம் பணத்துக்கும் நகைக்கும் உங்கள் அம்மா ஆசைப்பட்டதைச் சாக்காகக் கொண்டு சின்ன வயதிலிருந்து என்னை மணந்து கொள்ளுவதாக என் பெற்றோருக்குக் கொடுத்த வாக்கை அடியோடு மறந்து, என் வாழ்க்கையைப் பாழாக்கி விட்டீர்கள். மைதிலி ஏதோ ஒரு வெள்ளிக் குத்துவிளக்கு வேண்டு மென்று அவளுடைய அப்பாவிடம் கேட்டுக் கொண்டிருந்தது நேற்று என் காதில் விழுந்தது. உங்கள் அம்மா சொன்னதின்பேரில் அவள் அதைக் கேட்டதாகத் தெரிகிறது. அவளுடைய தந்தை அதை அவளுக்குக் கொடுக்க விரும்பவில்லை. இப்பொழுது நான் இவ் வீட்டுக்கு எஜமானியாக வந்திருப்பதால், இவ் வீட்டிலுள்ள பொருள்களெல்லாம் எனக்குத்தான் சொந்தமென அவர் கருதுகிறார். ஆனால் நான் அப்படிக் கருதவில்லை. என்னுடைய வாழ்க்கை மலர் அரும்பும் நிலையிலேயே கருகி விட்டது. பொன்னும் வெள்ளியும் பூஷணங்களும் இனிமேல் என் வாழ்க்கையை மலரச் செய்யப் போவதில்லை. உங்கள் அம்மாவின் குணம் எனக்கு நன்றாகத் தெரியும். ஆகவே, அவள் கேட்ட வெள்ளிக் குத்து விளக்கில்லாமல் உங்கள் வீட்டுக்குள் நுழைந்தால் என்ன ஆகுமென்பது எனக்குத் தெரியும். மைதிலி கஷ்டப்படுவதை நான் விரும்பவில்லையாதலால், அந்த விளக்கை யெடுத்து அவளுக்குத் தெரியாமல் அவளுடைய பெட்டியிலே வைத்து விட்டேன். அவள் சந்தோஷமா வாழவேண்டும், என்பது தான் என் விருப்பம். உங்கள் முகத்தைக்கூட நான் பார்க்க விரும்பவில்லை யாகையால்தான் இதை எழுதுகிறேன்: இதற்குப் பதில் போட எத்தனிக்க வேண்டாம்.***

***சண்பகம்.***

இதைப் படித்து முடித்துவிட்டு ஜகந்நாதனின் முகத்தைப் பார்த்தாள் மைதிலி. அவ

ளுடைய விழிகள் கலங்கி நீர்மல்கி யிருந்தன.

கற் சிலைபோல் அசைவற்று உட்கார்ந் திருந்த தன் புருஷனின் மடியில் அக்கடிதத் தைப் போட்டு விட்டு உடனே வேகமாகப் படிகளி லிறங்கிப் போனாள்.

பின்கட்டுத் தாழ்வாரத்தில் வெறும் வெளி யைப் பார்த்தபடி சுவரில் சாய்ந்து உட்கார்ந் திருந்தாள் சண்பகம். அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்து அவளுடைய முழங்காலில் தலை யைச் சாய்த்தபடி விம்மி விம்மி அழலானாள்.

"சித்தி!......சித்தி!......என்னை மன்னித்து விடு;......உன்னுடைய தங்கமான மனசை யறியாமல் உன்னை ரொம்பவும் புண்படுத்தி விட்டேன். சித்தி! என்னை மன்னித்துவிடு."

சண்பகம் ஒன்றும் பேசாமல் அவளை அணைத்துக் கொண்டாள். இத்தனை நாட்க ளாய் ஒதுக்கி வைத்திருந்த அவளுடைய துயரம் முழுதும் கரை புரளும் கண்ணீர் வெள்ளமாக வெடித்து வந்துவிட்டது. அன் றிரவு தன்னுடைய சோகக் கதை முழுதும் மைதிலிக்குக் கூறினாள் சண்பகம்.

ஏழைப் பள்ளிக்கூட வாத்தியாருக்கு நான்கு பெண்களுடன் ஐந்தாவதாகப் பிறந்த வள் சண்பகம். முதல் நான்கு பெண்களுக்கு எவ்வளவோ சிரமத்தின் பேரில் கலியாணம் செய்த அவள் தந்தை சண்பகத்தின் விவாக விஷயமாகக் கவலையுற்றிருந்தார். ஏனெனில் அவர்கள் வீட்டிலேயே வளர்ந்து வந்த ஜகந்நாதன் அவளுடைய கைப் பிடிக்க வேண்டியவனென்பது ஊரறியத் தீர்மான மான விஷயம். அந்த எண்ணத்துடனேயே கஷ்டத்தைப் பாராட்டாமல் அவனைப் படிக்க வைத்தார் சண்பகத்தின் தந்தை. படிப்பு முடிந்து வேலையானவுடன் அதிர்ஷ்டவசமாக, முன்னுக்கு வந்து விட்டான் அவன்.

தாயின் உபதேசத்துக் கிணங்க, அவன் மன மும் மாறியது. ஏழைப் பெற்றோரின் பெண் ணான ஏழைச் சண்பகத்தை மனைவியாகக் கொள்ள மறுத்து விட்டான். இரண்டே மாதத்தில் ஜில்லா ஜட்ஜின் பெண்ணான மைதிலி அவன் மனைவியானாள். ஜகந்நாத னின் தாயார் விரும்பிய நகை நட்டுக்களும் சீர் வரிசைகளும் ஏராளமாகக் கிடைத்தன.

மைதிலியின் விவாகம் நடந்த அடுத்த வருஷமே சண்பகம் விதியின் கோர விளையாட் டினால், ஜகந்நாதனுக்கு மாமியார் ஸ்தானத் துக்கு வந்து சேர்ந்தாள். — இதுதான் அவ ளுடைய கதை.

இப்பொழுதெல்லாம் மைதிலிக்குச் சித்தி தான் தெய்வம். — அவள் கீறின எல்லையைத் தாண்டமாட்டாள். எங்கு போனாலும் சித்தி யின் பெருமையைப் பேசுவதில் அவளுக்குப் பொழுது போவதே தெரியாது.

அன்றிரவு ஜகந்நாதன் மட்டும் ஊருக்குப் போனான். சித்தியுடன் இன்னும் ஒருமாச மாவது இருந்து விட்டுத்தான் வரப்போவ தாகக் கண்டிப்பாகக் கூறிவிட்டாள் மைதிலி.

---




~ விஜயம் ~

## 4. மந்திரவாதியின் சதி

இளைய ராணிக்கு அன்று முழுவதும் ஓய்வே எடுத்துக் கொள்ள முடியவில்லை. மிகவும் ஜாக்கிரதையாகக் கொஞ்சமும் சந்தேகம் ஏற்படாத விதத்தில் கமலம் சித்தியின் நடவடிக்கைகளைக் கவனித்து வந்தாள்.

இரவு சுமார் மணி பத்திருக்கும். அந்தப்புரம் எங்கும் மௌனம் நிலவியது. வேலைக்காரர்கள் விடும் குறட்டைச் சத்தம்தான் கேட்டது. கமலத்துக்கு அன்று என்னவோ தூக்கமே வரவில்லை. ஏதோ கொடிய சதி வேலை நடக்கப் போவதாக அவள் மனசுக்குள் ஏதோ ஒன்று கூறிக்கொண்டேயிருந்தது. கமலம் தூங்காமல் விழிப்புடன் இருந்தாள். ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டு வெளியே நடப்பதைக் காது கொடுத்துக் கவனித்தாள். அறையில் ஒரு மூலையில் மிகவும் மங்கலாக ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்த அறைக் கதவு மெதுவாகத் திறந்து கொண்டது. கமலம் தூங்குவதுபோல் கண்களை மூடிக் கொண்டாள். மறு கணம் ஒரு உருவம் உள்ளே வந்து கமலத்தின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுச் சரேல் என்று நகர்ந்தது. அந்த உருவம் நகர்ந்ததும் கமலம் எழுந்து கொஞ்சங்கூட சத்தம் போடாமல் அந்த உருவத்தைப் பின் தொடர்ந்து சென்றாள். சிறிது நேரத்தில் கமலத்துக்கு அது அந்தப்புரத்துத் தலைமை வேலைக்காரி என்பது தெரிந்துவிட்டது. கமலம் தூங்குகிறாளா என்பதை அறியத்தான் அவள் அப்படித் தன்னைக் கவனித்துப் பார்த்தாள் என்பதும் கமலத்துக்கு விளங்கி விட்டது.

வானத்தில் பூரண சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. கமலம் தனக்கு முன்னாலே சென்ற வேலைக்காரி தன்னைப் பார்த்துவிடாதபடி ஜாக்கிரதையாகவும் மெதுவாகவும் சென்றாள். கொஞ்ச தூரத்தில் இன்னொரு ஆள் நிற்பதையும் கமலம் கவனித்தாள். வேலைக்காரியும் அந்தப் புது மனிதனும் வேகமாக நடக்க ஆரம்பித்தார்கள். கமலமும் அவர்களைப் பின் தொடர்ந்து போனாள்.

அவர்கள் நேரே நந்தவனத்துக்குப் போனார்கள். நந்தவனத்தில் அவர்களைத் தொடர்ந்து போவது கமலத்துக்கு மிகவும் சிரமமாயிருந்தது. கீழே உதிர்ந்திருந்த காய்ந்த சருகுகள் 'சல சல' வென்று சத்தங் கேட்டபடியினால் கமலத்தினால் வேகமாக நடக்க முடியவில்லை. ஆனாலும் அவள் இதற்காகப் பயந்து நின்றுவிடவில்லை. மெதுவாக நடந்து கொண்டேயிருந்தாள்.

நந்தவனத்தில் அழகிய குளம் ஒன்று இருந்தது. அந்தக் குளத்தங்கரையில் இருந்த சலவைக் கல் மேடையில் இளையராணி அமர்ந்திருந்தாள்.

வேலைக்காரி தன்னுடன் வந்தவனைக் கொஞ்ச தூரத்திலேயே நிறுத்திவிட்டு, கை குவித்துத் தலை குனிந்து இளைய ராணியை வணங்கினாள்.

கமலம் ஒரு செடி மறைவில் சர்வ ஜாக்கிரதையாக மறைந்து கொண்டு கவனிக்கலா

னாள். இந்தச் சமயத்தில் சித்தியின் கண்களில் படுவது எவ்வளவு பெரிய ஆபத்து என்பது அவளுக்கு நன்றாய்த் தெரியும். இருந்தாலும் இங்கே நடக்கப்போகும் மர்மங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்னும் அவளுடைய ஆர்வம் அவளுக்குத் தைரியத்தை அளித்தது. அந்த ஒரு சில விநாடிகளுக்குள் அவள் மனம் என்னாததெல்லாம் எண்ணத் தொடங்கியது.



'இந்தச் சதியின் நோக்கம் அப்பாவுக்கே தீங்கு விளைவிப்பதாயிருக்குமோ? இல்லை, நம் அண்ணன்மார்களுக்குக் கேடு உண்டாக்குமோ?' என்றெல்லாம் எண்ணிப் பயந்தாள், கமலம்.

இதற்குள் வேலைக்காரி மெதுவான குரலில் பேச ஆரம்பித்தாள். கமலம் கூர்மையாகக் கவனித்தாள்.

"மகாராணி, இவர்தான் நான் முன்பு கூறிய மந்திரவாதி. மந்திரங்களிலும் தந்திரங்களிலும் மகா வல்லவர். இவரிடம் தங்கள் விருப்பத்தைக் கூறினால் தகுந்த ஏற்பாடு செய்வார்!" என்று கூறி வேலைக்காரி, சற்று எட்டி நின்றுகொண்டிருந்த மந்திர வாதியை வரும்படி சைகை காட்டி அழைத்தாள். மந்திரவாதி அருகில் வந்து ராணியை வணங்கினான். கமலம் தன் மறைவிடத்தை விட்டுக் கொஞ்சம் வெளியே வந்து மந்திரவாதியைப் பார்த்தாள். அவன் முகம் பார்க்கப் பயங்கரமாயிருந்தது.

உடனே இளைய ராணி, "மந்திரவாதியே, கால தாமதம் செய்வதற்கில்லை, இந்த நாட்டுப் பதினொரு இளவரசர்களையும் நாளைக்குச் சூரியன் உதயமாவதற்குள் துரத்திவிட வேண்டும். அவர்கள் உயிருக்கு அபாயம் விளைவிக்க வேண்டாம். உருவத்தை மாற்றி எங்காவது துரத்தி விட வேண்டும். உம்மால் அது செய்ய முடியுமா?" என்று கேட்டாள்.

"மகாராணி, இது என்ன பிரமாதம்! உத்தரவு கொடுங்கள். எது செய்யவும் சித்தமாயிருக்கிறேன்!" என்றான் மந்திரவாதி.

பிறகு இளைய ராணியை நெருங்கி மந்திரவாதி மிகவும் தாழ்ந்த குரலில் ஏதோ சொன்னான். ராணியும் தலையை அசைத்தாள். அப்புறம் இளைய ராணி, கொஞ்சம் பலமான குரலில், "மந்திரவாதியே, சர்வ ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். உம்முடைய மந்திரமும் தந்திரமும் யாருக்கும் தெரியக் கூடாது. இது அரண்மனை இரகசியம்!" என்றாள்.

மந்திரவாதி தலை வணங்கி, "மகாராணி, என்னை நம்புங்கள்! நான் யாரிடமும் இது பற்றிப் பேச மாட்டேன்!" என்று கூறினான்.

கமலத்துக்குப் பயத்தினால் உடம்பு நடுங்கியது. தன் சகோதரர்களுக்கு ஏற்படப் போகும் அபாயத்தை எண்ணி அவள் மிகவும் பயந்தாள். மந்திரவாதி அவர்களை என்ன செய்யப் போகிறான் என்னும் விஷயத்தை மிகவும் மெதுவாகச் சொன்னதனால் அதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

இளைய ராணியும் வேலைக்காரியும் மந்திரவாதியும் போகிற வரையில் கமலம் அங்கேயே காத்துக் கொண்டிருந்தாள். கெட்டியாக மூச்சு விடக்கூட அவளுக்குப் பயமாயிருந்தது. பிறகு மெதுவாகத் தன் மறைவிடத்தை விட்டு வெளியே வந்து, தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டாள்.

கமலத்துக்குத் தூக்கம் எப்படி வரும்? தன் அருமை அண்ணன்மார்களுக்கு வரப் போகும் விபத்தை எண்ணி மனம் புழுங்கினாள். எப்படியாவது இந்த விபத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றி விடவேண்டும் என்று அவள் நினைத்தாள். ஆனால் அவளால் என்ன செய்ய முடியும்? அரசனிடம் இதைப்பற்றிச் சொல்லலாம் என்றால் அதுதான் உபயோகமில்லை என்று முன்பே அவளுக்குத் தெரிந்து விட்டதே. நீண்ட நேர யோசனைக்குப் பிறகு கமலத்தின் கண்கள் அலுத்துப் போய்த் தாமாகவே மூடிக் கொண்டன. (தொடரும்)






## 8. என் கை பூத் தொடுக்குமா?

நந்தி துர்க்கத்திலிருந்து பொன்னி திரும்பிய போது வேலைக்காரி செங்கம்மா ராஜாளி மடத்திற்குச் சமீபமாக உள்ள தோப்பில் ஒரு மனிதனுடன் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருப்பதைக் கண்டாள். அவர்கள் உரத்த குரலில் கடுமையாகப் பேசிக் கொண்டதிலிருந்து அவர்களுக்குள் ஏதோ தகராறு என்று விளங்கியது. பொன்னி அதை விசாரித்துச் சமாதானம் செய்து வைக்கும் நோக்கத்தில் அவர்களை நெருங்கினாள்.

செங்கம்மாவோடு தர்க்கம் செய்து கொண்டிருந்தவன் குருவிக் குளத்திற்குச் சமீபத்தில் வசிப்பவன். அவன் பெயர் கருப்பய்யன். பொன்னிக்கு அவனை நன்றாகத் தெரியும். அவன் பொன்னியைக் கண்டதும் "வா, அம்மா! நீ இந்த வீட்டிலே தான் வேலை செய்கிறாயா! உன் வாயிலே வயிற்றிலே அடிக்காமல் கூலியை யெல்லாம் சரியாகக் கொடுக்கிறார்களா....!" என்று கேட்டான்.

பொன்னி அந்தச் சந்தர்ப்பத்தில் வந்து குறுக்கிட்டது செங்கம்மாவுக்கு வெறுப்பாய்த்தானிருந்தது. அவள் பொன்னியை அலட்சியமாகப் பார்த்துக் கொண்டு, "உனக்கு இங்கே என்ன வேலை! வீட்டில் உனக்கு எவ்வளவோ காரியமிருக்கிறது. போய்ப் பார்" என்றாள்.

பொன்னியா அவள் வார்த்தைகளுக்குக் கட்டுப்படுகிறவள்! "இதோ நான் போகிறேன். எனக்கு என்ன இங்கே வேலை! இந்த மனுஷர் ரொம்ப நல்லவராச்சே, இவரோடு உங்களுக்கு என்ன தகராறு என்று விசாரிக்கலாம் என்று வந்தேன்" என்றாள்.

"என்ன தகராறு! நேற்று ஒரு சவ அடக்கத்துக்காக நாலு ஆளை அழைத்துக் கொண்டு வந்தேன். பத்து ரூபாய் கூலி பேசினேன். ஆனால் இப்போ எட்டு ரூபாய்தான் கொடுப்பேன் என்கிறார்கள். போனால் போகட்டும்; எத்தனையோ அனாதைப் பிணத்தைத் தருமத்துக்காக எடுத்துக் கொளுத்துகிறதில்லையா! அதைப் போல நினைத்துக் கொண்டு போகிறேன்...நீ இந்த வீட்டில் வேலை செய்கிறாய் என்று தெரிந்ததனால் உன் முகத்துக்காக விட்டு விட்டுப் போகிறேன்" என்று சொல்லி விட்டுக் கீழே கிடந்த எட்டு ரூபாய்களையும் எடுத்துக் கொண்டு போனான் கருப்பய்யன்.

"ஆண் பிள்ளையல்லவா அவன்! திமிராகத்தான் பேசுவான்!" என்றாள் செங்கம்மா.

பொன்னி செங்கம்மாவைச் சுட்டுவிடுவது போல் பார்த்தாள். அவள் முகத்தில் இவ்வளவு நாளுமில்லாத அவ்வளவு வெறுப்புத் தோய்ந்திருந்தது. "சே! இரண்டு ரூபாய் என்ன பிரமாதம்! இந்தச் சமயத்தில் உங்களுக்கும் நான்கு ஆண்பிள்ளைகள் வந்து உபகாரம் செய்தார்களே, அதுதான் பெரிது..." என்றாள் பொன்னி.

"நீ உன் வாயை அடைத்துக் கொண்டு பேசாமலிரு. நான் ஆண் பிள்ளை யென்றால் பயந்து விட மாட்டேன்..." என்றாள் செங்கம்மா.

"உங்களுக்கு ஏன் ஆண் பிள்ளைகளிடம் அவ்வளவு வெறுப்பு! அவ்வளவு கோபம்!" என்றாள் பொன்னி கொஞ்சம் பயமாக.

"இந்த உலகத்திலே நடக்கிற எல்லா அக்கிரமத்துக்கும் ஆண் பிள்ளைகள்தான் காரணம். அவர்களெல்லாரும் சுயநலக்காரர்கள்; போக்கிரிகள்; நல்ல நடத்தை இல்லாதவர்கள்! அவர்களுக் கெல்லாம் பெண்களென்றால் விளையாட்டுப்பொம்மை மாதிரி! நீ சிறு பெண். நான் சொல்லுகிற வார்த்தைகளையெல்லாம் மனதில் வைத்துக் கொள்" என்றாள் செங்கம்மா ஆத்திரத்தோடும் கண்டிப்போடும்.

"பாவம்! உங்களை யாரோ ஒரு ஆண் பிள்ளை மோசம் செய்து விட்டான் போலிருக்கிறது. அதனால்தான் உங்கள் மனது ரொம்ப நொந்து போயிருக்கிறது!" என்றாள் பொன்னி ஒன்றும் அறியாத குழந்தையைப் போல.

செங்கம்மா சந்தேகக் கண்களுடன் பொன்னியைப் பார்த்தாள். "எந்த ஆண் பிள்ளையும் என்னை மோசம் செய்து விடவில்லை. எந்த ஆண் பிள்ளையின் கையிலும் நான் சிக்கவில்லை. எனக்குத் தெரியும், எத்தனையோ பெண்கள் ஆண் பிள்ளைகளுக்கு அடிமையாகி வாழ்க்கையைக் குலைத்துக் கொண்டு நாசமாய்ப் போன கதை யெல்லாம்!" என்றாள் ஆத்திரமும் கோபமும் பொங்க.

"எவ்வளவோ பெண்கள் ஆண்களின் வலையில் சிக்கி நாசமாய்ப் போய்விட்டது உங்களுக்குத் தெரியுமா! எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. உங்களுக்குத் தெரிந்த பெண்களில் யாராவது அப்படி…" என்று சொல்லி நிறுத்தி விட்டுச் செங்கம்மாவின் முகத்தைப் பார்த்தாள் பொன்னி.

செங்கம்மாவுக்கு அப்பொழுது ஆயாசமும் வெறுப்பும் ஏற்பட்டது. "பொன்னி நீ ரொம்ப அதிகமாய்ப் பேசுகிறாய். நீ போய் உன் வேலையைப் பார்" என்று சொல்லி விட்டுப் போனாள்.

சமையலறையில் பொன்னி பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் செங்கம்மா உள்ளே வந்து ஏதோ காரியங்களைக் கவனிக்கலானாள். பொன்னி மறுபடியும் அவள் வாயைக் கிளறி ஏதோ ஒரு உண்மையைத் தெரிந்து கொள்ள நினைத்தாள். "பாவம்! இந்த வீட்டிலே சாரதாம்மா பத்துப் பன்னிரண்டு வருஷம் அடைத்துக் கிடந்தப்புறம் சுடுகாட்டுக்குப் போகும் போதுதான் இந்த வீட்டை விட்டு வெளியே தாண்ட முடிந்தது போலிருக்கிறது!" என்றாள் மிதமிஞ்சிய அனுதாபத்தோடு.

செங்கம்மா அவளை எரித்து விடுவதுபோலப் பார்த்தாள். "ஆமாம்! அதைப்பற்றியெல்லாம் உனக்கு என்ன கவலை!" என்றாள்.

"எனக்கு என்ன கவலையா! எனக்கு ஒரு கவலையும் இல்லை. ஆனால் இது ரொம்ப வெட்கக் கேடு. இதனாலே அவளுக்கு என்ன நன்மை ஏற்பட்டது! வேறு யாருக்குத்தான் என்ன நன்மை ஏற்பட்டது! வெளியே ஒரு இடத்தையும் பார்க்காமல் வேற்று முகங்களையே பாராமல் சுடுகாட்டுக்குப் போகும் வரையில் இந்தப் பேய் மடத்தில் அடைத்துக் கிடந்ததில் என்ன சுகம்!" என்றாள் பொன்னி துயரத்தோடும் வெறுப்போடும்.

"பொன்னி! நீ வாயை அடைத்துக் கொண்டு பேசாமல் இருக்க மாட்டாயா!" என்று கத்தினாள் செங்கம்மா.

"நான் எதற்காக வாயை அடைத்துக்கொண்டிருக்க வேண்டும்! ஆண்பிள்ளைகளின் மேல் ஏற்பட்ட வெறுப்பினால் இந்த வீட்டிற்குள்ளேயே அடைத்துக் கிடந்து உயிர் விடுவது பைத்தியக்காரத்தனம். இவ்வளவு நாளும் சாரதாம்மா ஆண்பிள்ளைகளின் மேல் ஏற்பட்ட வெறுப்பினால் இந்த வீட்டில் சிறையிருந்து உயிர் விட்டார் என்று நினைக்கிறேன். கடைசியாக அந்த அம்மா இறந்த பிறகு அவர்கள் பிரேதத்தைச் சுடுகாட்டுக்குச் சுமந்து செல்ல நான்கு ஆண்பிள்ளைகள்தான் வேண்டியிருந்தது. ஆமாம்! உங்களுக்கும் ஆண்பிள்ளைகளென்றால் வெறுப்பாய்த்தான் இருக்கிறது. பிறந்தவர்களெல்லாம் ஒரு நாள் சாகவேண்டியதுதான். நீங்களும் ஒரு நாள் அந்த வழியாகத்தான் போகணும். அப்போது உங்களுக்கும் நான்கு ஆண்பிள்ளைகள் வந்துதானாக வேண்டும்" என்றாள் பொன்னி ஆவேசத்தோடு.

செங்கம்மாவின் கோபம் எல்லை கடந்துவிட்டது. அவள், "என்ன சொன்னாய்!" என்று சொல்லிப் பொன்னியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள்.

அந்த அடி பொன்னியை நிலை கலங்க வைத்து விட்டது. அவள் முகம் ரத்தமாகச் சிவந்து விட்டது. அவள் கண்களில் தீப்பொறி பறந்தது. கண நேரத்தில் செங்கம்மாவின் முகத்தில் நறுக்கென்று ஒரு குத்து விழுந்தது. பதிலுக்குப் பதிலாக அடுத்த அடி செங்கம்மா கொடுப்பாளென்று உணர்ந்த பொன்னி சட்டென்று நகர்ந்து நின்று மேடை மீது கிடந்த பெரிய தோசைத் துடுப்பை எடுத்துப் பாதுகாப்பு ஆயுதமாக வைத்துக்கொண்டாள். தன்னை எதிர்த்து வந்தால் அந்தச் சமயத்தில் செங்கம்மாவை அடித்துக் கொன்றுவிடும் துணிவுகூட அப்போது பொன்னிக்கு ஏற்பட்டிருந்தது.

செங்கம்மா சட்டென்று பாய்ந்து அவள் துடுப்பு ஏந்தியிருந்த கையைக் கெட்டியாகப் பிடித்து முறுக்கினாள். பொன்னியின் கையிலிருந்த துடுப்பு நழுவிக் கீழே விழுந்தது. துடுப்பு தரையில் விழுந்தவுடனே செங்கம்மா தன் பலம் முழுவதையும் காட்டி அவளைப் பிடித்துத் தள்ளினாள். பொன்னி தரையில் விழுந்தாள். செங்கம்மா சட்டென்று துடுப்பைக் கையிலெடுத்து வைத்துக் கொண்டாள். அப்பொழுது அவள் பத்திரகாளியைப் போல்தான் காட்சியளித்தாள். அவள் முகம் பார்க்கவே பயங்கரமாயிருந்தது. "மரியாதையோடு எழுந்திரு……" என்று கர்ஜித்தாள்.

பொன்னி மெதுவாக எழுந்தாள். கீழே விழுந்ததால் அடிபட்டு நொந்த தன் தோளையும் முழங்கைகளையும் மெதுவாகத் தடவிக் கொண்டாள். அவள் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்திருந்தன. உதடுகள் துடித்தன. கோபமும் ஆத்திரமும் குமைந்து வந்தன. செங்கம்மாவோடு போராடத் தனக்கு வேறு ஏதேனும் சரியான ஆயுதமாகக் கிடைக்காதா என்று அவள் கண்கள் நாலா புறமும் சுழன்று நோக்கின.

"இப்படியெல்லாம் என்னைக் கொன்று விடலாம் என்று நீ நினைக்கிறாயா! அது முடியாது. நான் உன்னை விடப் பெரியவள்.



உன்னைப் போல எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். என்று சீறினுள் செங்கம்மா.

"என்னை நீ பேய் மாதிரி அடித்துக் கீழே தள்ளி யிருக்கிருய். ஒரு நாள் இல்லாவிட்டால் இன்னெருநாள் இதற்கு நான் சரியான பாடம் கற்றுக் கொடுக்காமல் விடப் போவதில்லே" என்று கறுவிக்கொண்டு தன்னுடைய அறையை நோக்கி நடந்தாள் பொன்னி.

பொன்னி தன் அறையில் கன்னத்தில் கை ஊன்றிய வண்ணம் உட்கார்ந்திருந்தாள். அவள் உள்ளம் பதறியது. கண்களில் நீர் ததும்பியது. இவ்வளவு நாளும் அவளுக்கு இப்படிப்பட்ட ஆத்திரமும் கொதிப்பும் துக்கமும் அவமான உணர்ச்சியும் ஏற்பட்டதே யில்லே. அவளே எவரும் அப்படிக் கை நீட்டி அடித்ததே யில்லே. வேதாவை எண்ணித்தான் அவள் அதைச் சகித்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இந்த நிமிஷமே அவள் அந்த வீட்டை விட்டுப் போய் விடுவதை ஒருவராலும் தடுத்துவிட முடியாதல்லவா! தன்னைத் தொட்டு அடித்த செங்கம்மாவிற்குச் சரியானபடி பதில் பாடம் கற்பித்து விட்டுப் போய் விடுவதுதான் நல்லது என்று கூட அவள் மனதில் தோன்றியது. ஆனல் வேதாவை இந்த நிலேயில் விட்டுப் பிரியக்கூடாது என்ற பச்சாத்தாப உணர்ச்சிதான் அவள் கோபத்தையும் ஆத்திரத்தையும் அடக்கியது. வேதாவின் இருதயம் அவளுக்குத் தெரியும். குழந்தைப் பருவத்திலிருந்து வேதாவைச் சிறைப்படுத்தி வைத்திருக்கும் அந்த இரண்டு கொடிய ஸ்திரீகளுக்கும் நல்ல புத்தி வரும்படியாகப் பாடம் கற்பித்துச் சரியான தண்டனையும் வாங்கித் தரவேண்டுமென்பதுதானே அவளுடைய ஆவல்! அது ஒரு நாள் நிறைவேருமல் போய் விடாது. தன்னை அரக்கி போலக் கன்னத்தில் அடித்துக் கீழே தள்ளிய செங்கம்மா ஒருநாள் சரியானபடி தண்டிக்கப்படுவாள் என்று அவள் நிச்சயமாக நம்பினுள். தவிர, டாக்டர் பரசுராமனை நினைக்கும்போதும் அவள் மனது இரங்கியது. சிறிது தன்னம்பிக்கையும் அவளுக்கு ஏற்பட்டது. என்றைக்காவது ஒரு நாள் அவர் இந்தப் பொல்லாத பெண் பேய்களின் அந்தரங்க வாழ்க்கை ரகசியத்தைக் கண்டு பிடிக்காமல் இருக்கமாட்டார். அவருடைய துணையும் உதவியும் இருக்கும்போது பொன்னி எதற்காக அஞ்சவேண்டும்! ஆகவே, எது நேர்ந்தாலும் சரி, இந்த வீட்டிலேயே பொறுமையாக இருப்பதுதான் அவளுக்கு உசிதமாகத் தோன்றியது. டாக்டர் பரசுராமனைப் பற்றி அவள் நினைத்தபோது, அவர் வேதாவிற்காக எழுதித் தன்னிடம் கொடுத்திருந்த கடிதம் ஞாபகத்திற்கு வந்தது. மடியில் செருகி வைத்திருந்த அதை மெதுவாக எடுத்துப் பார்த்தாள். சிறிய நீல நிற உறை! ஒழுங்காக ஒட்டப்பட்டிருந்தது. அதற்குள் இருக்கும் கடிதத்தில் அந்த டாக்டர் என்ன எழுதி இருப்பார் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்! ஆனல் அதில் என்ன எழுதியிருக்கிருர் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பு அவளுக்கு அதிகமாகத் தானிருந்தது. அந்தக் கடித உறையைத் திருப்பித் திருப்பிப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள்.



சட்டென்று அறைக் கதவை யாரோ திறக்கும் சப்தம் கேட்டது. பொன்னி பரபரப்போடு கடிதத்தை மறைத்து மடியில் வைத்துக் கொண்டு பார்த்தாள். அறையின் வாசற்படிக்குச் சமீபமாக செங்கம்மா நின்று கொண்டிருந்தாள். "உனக்கு இனிமேல் இந்த வீட்டில் இருக்கப் பிரியமிருக்காது. உன்னுடைய துணி மணிகளே எல்லாம் மூட்டை கட்டுகிருயா!" என்ருள் செங்கம்மா.

"ஆமாம்! இந்த வீட்டைவிட்டுப் போய்விடவேண்டுமென்றுதான் நினைக்கிறேன்......"

"நீ போகணுமென்று பிரியப்பட்டால் தாராளமாய்ப் போகலாம். நாங்கள் உன்னைத் தடுத்து நிறுத்த மாட்டோம். ஆனல் நீ இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திருந்தால் வேறு வேலேக்காரி வந்து விடுவாள்......" என்ருள் நயமாகச் செங்கம்மா.

"இருக்கலாம் ஆனல் உங்கள் சட்ட திட்டத்துக்குக் கட்டுப்பட்டு அடி உதை வாங்கிக் கொண்டு யாரால் வேலேசெய்ய முடியும்!" என்ருள் பொன்னி.

"அதெல்லாம் உன் தவறு. எல்லாம் நீ நடந்து கொள்கிற விதத்திலிருக்கிறது. நீ பெரியவர்களிடம் அடக்கமாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நீ என்னைத் துடுப்பால் அடிக்க வந்தாயே, அடிபட்டிருந்தால் என் கதி என்னவாகி யிருக்கும்...!"

"எதுவாகி இருந்தால் எனக்கென்ன! நீ என்னைக் கன்னத்தில் அடிக்கும்போது என் கைகள் பூத்தொடுத்துக் கொண்டிருக்குமோ!"

"அதற்காக அவ்வளவு பெரிய இரும்புத் துடுப்பாலே அடிக்கிறதா!"

"உங்களைப் போல இருக்கிற பெரியவர்களைக் கையாலே அடிக்கச் சாத்தியப்படுமா!"

"நீ என்னை அந்தத் துடுப்பால் அடித்து என் உயிர் போயிருக்கணும். இத்தனே நேரம் உன் கதி என்னவாகி இருக்கும், தெரியுமா! நீ ரொம்ப நாள் ஜெயிலுக்குள்ளே கிடக்கும்படி நேர்ந்திருக்கும். உனக்குத் தூக்குத் தண்டனை கொடுத்தாலும் கொடுப்பார்கள்!"

பொன்னி உதட்டைப் பிதுக்கிக் கொண்டு, "ஹூம்! சரிதான். இது எனக்கு எப்படித் தெரியும்!" என்றாள்.

"ஆமாம்! இதை யெல்லாம் நினைவில் வைத்துக் கொள். நான் உன்னை விட வயதில் பெரியவள். நான் உனக்கு நல்லதைத்தான் சொல்லுகிறேன். போனது போகட்டும். சரி! வா, சமையலறைக் காரியமெல்லாம் அப்படியே கிடக்கிறது" என்றாள் செங்கம்மா அனுதாபத்துடன்.

சிறிது நேரத்திற்கு முன்னால் நடந்தவைகளை யெல்லாம் மறந்து விட்டுச் செங்கம்மா தன்னிடம் இவ்வளவு தணிந்த சுபாவத்தோடு பேசுவாளென்று பொன்னி நினைக்கவில்லை. ஆனால் அவள் செங்கம்மாவின் பேச்சில் ஏமாந்து விடவில்லை. அவளுக்குச் செங்கம்மாவின் கடின இருதயமும் ராட்சத சுபாவமும் நன்கு தெரியும். அவள் இன்னும் சில நாட்கள் அந்த வீட்டிலிருக்கும்படி வேண்டிக் கொண்டதற்குக் காரணம் பொன்னியை இந்தச் சமயத்தில் வெளியே அனுப்பினால் தனக்கு ஏதேனும் ஆபத்து நேரும் என்பதாலோ அல்லது வேறு வேலைக்காரி வரும் வரையில் தனக்கு உதவியாய் இருக்கும் ஒருத்தியை விட்டு விடக்கூடாது என்பதாலோதான் என்று பொன்னிக்குத் தெரிந்தது. பொன்னி அவள் வார்த்தைக்கு இணங்கி அவளோடு சமையலறைக்குச் சென்றாள்.

ஒவ்வொரு நாளையும் போல் அன்று மாலை நேரமும் ஓடியது. மறுபடியும் அன்று செங்கம்மாவுக்கும் பொன்னிக்கும் எவ்விதத் தகராறும் ஏற்படவில்லை. வழக்கம்போல் செங்கம்மா தன் அறையில் போய்ப் படுத்தாள். பொன்னியும் தன்னுடைய அறைக்குப் படுக்கச் சென்றாள்.

அன்று இரவு எப்படியாவது டாக்டர் எழுதிக் கொடுத்த கடிதத்தை அவள் வேதாவிடம் சேர்த்து விடவேண்டும். ஒவ்வொரு நாளும் நடுநிசி வேளையில் வேதாவின் அறைக்குப் போவது எவ்வளவு அபாயமென்று அவளுக்குத் தெரியும். டாக்டரிடமிருந்து வேதாவுக்குக் கடிதம் வாங்கி வந்ததை மரகதமோ செங்கம்மாவோ அறிந்தால் தன்னுடைய திட்டத்தையே குலைக்க ஏற்பாடு செய்யாமல் இருக்க மாட்டார்கள். முதல் நாள் இரவே வேதாவின் அறைக்குச் சென்று வரும்போது செங்கம்மா பார்த்து விட்டாளல்லவா! அப்பொழுது அவளிடம் உள்ளதை மறைக்கப் பொன்னி எவ்வளவு பாடு பட்டாள்.

மணி பன்னிரண்டிற்கு மேலிருக்கும். பொன்னி தூங்கவில்லை. மரகதமும் செங்கம்மாவும் அயர்ந்த நித்திரையிலிருப்பார்கள் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டது. எங்கும் ஒரே நிசப்தமாக இருந்தது. அந்த இருளிடையே அடையாளம் கண்டுகொண்டு வேதாவின் அறைக்குப் போய் விடலாம் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டதால் கையில் விளக்கைக்கூட எடுத்துக்கொள்ளாமல் மெதுவாக நடந்தாள். மெதுவாக மாடிப் படிகளில் ஏறி மாடித் தாழ்வாரத்திற்கு வந்து சுவற்றைத் தடவிய வண்ணம் இருளிடையே வேதாவின் அறை வாசற்படியை அடைந்தாள். ஜாக்கிரதையாகக் கதவிலுள்ள கைப் பிடியைப் பிடித்துக் கதவை உள்புறமாகத் தள்ளினாள். கதவு திறந்து கொண்டது. அறையிலிருந்த விளக்கு அடக்கமாக எரிந்ததால், இருள்தான் அந்த அறையில் அதிகமாகப் பரவி யிருந்தது. ஜன்னல் வழியாக வந்த நிலவின் ஒளி வேதா படுத்திருந்த கட்டிலில் திட்டமாக விழுந்திருந்தது. பொன்னி பதட்டமில்லாமல் வேதாவின் கட்டிலுக்குச் சமீபமாகப் போய் "வேதா..." என்றாள் மெதுவான குரலில்.

"ஏன், பொன்னி!" என்று கேட்டவாறு பரபரப்போடு எழுந்தாள் வேதா. (தொடரும்)



கோட்டையூர் கே. வி. ஏஎல். எம். ராமநாதன் செட்டியார் சென்ற ஏழு மாதங்களாக விமானத்திலேயே உலகம் பூராவும் குடும்பத்துடன் சுற்றிவிட்டுச் சென்ற மாதம் இந்தியா திரும்பினார். அவர் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் இறங்கியபோது பல நண்பர்கள் கூடி வரவேற்பளித்தார்கள்.

# உறுதியான எதிர்ப்பு சக்தி





## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்




வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதன் மூலம் தேக வலிமையைப்பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் எந்த நோயும் வராமல் தடுக்கும் சக்தியை பெறுவீர்கள். நிரூபிக்கப்பட்ட குணம் பொருந்திய இந்த டானிக்கில் போஷாக்கு அளிக்கும் அம்சங்கள் ஏராளமாக இருப்பதால், உங்களுக்கு உபரியாக தேவையாயிருக்கும் உறுதியான எதிர்ப்பு சக்தியை உண்டாக்கும்.

குழந்தைகளுக்கு உடல் வலிவும் ஆரோக்யமும் அதிகரிக்க உதவுவதிலும் பிரசித்திபெற்றுள்ள இந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்டு சாப்பிட ருசியானதாகக்கூட. இன்றே வாங்குங்கள்.

# WATERBURY'S
## COMPOUND
## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தெம்புடன் வைத்திருக்கும்

NAS. 742



7 O'CLOCK
SLOTTED
BLADE
DOUBLE EDGE
7 O'CLOCK
SLOTTED BLADE




ரா. வி.

கிழக்கிந்திய ரெயில்வேயின் 'லூப் லயனி'ல் ஏதோ ஒரு ஸ்டேஷனிலிருந்து ஒரு சிறிய இருப்புப்பாதை இழுக்கப்பட்டிருந்தது. அது இந்தச் சிறு ஸ்டேஷனில் வந்துதான் முடிவுற்றிருந்தது. இந்தப் பாதையின் மொத்த நீளம் நாற்பது மைல்தான். ஒன்றரை முழம் அகலம் உள்ள இந்த இருப்புப் பாதையில் சின்னஞ்சிறு பெட்டிகள் மட்டும் இங்கும் அங்கும் போய் வந்த வண்ணம் இருந்தன.

ஆகவே, அக்கம் பக்கத்தில் உள்ள ஜனங்கள் அதற்குச் சின்னப்பாதை என்று பெயரிட்டு அழைத்து வந்தனர். ஆனால் அந்த ஊர் ஸ்டேஷன் மாஸ்டருக்கு அது மிகவும் அவமானமாகப் பட்டது. யாராவது அவருக் கெதிரே அதைச் 'சின்ன லயன்' என்றோ, சின்னப் பாதை என்றோ அழைத்து விட்டால் அவருக்கு முகம் மூக்கு எல்லாம் ரத்தமாகச் சிவந்து விடும். அவர் அவனை அலுத்துச் சலித்துக் கொள்ளுவார். அவனைப் பார்த்துச் சிடுசிடுப்புடன், "சின்ன லயனா? எது சின்ன லயன்? எதை அப்பா சின்ன லயன் என்று சொன்னாய்?" என்று கேட்பார். பிறகு மிகுந்த கோபத்துடன் ஆங்கிலத்தில், "ரெயில்வே லயின் இஸ் ரெயில்வே லயின்!" என்று கூறிவிட்டுத் தாய் மொழியில், "இதில் சின்னது பெரிசு என்று பேச்சு எழவே நியாயம் ஏது?" என்பார். பிறகு பக்கத்தில் உள்ள ஜனங்களைப் பார்த்து, "சாளிக்கிராமத்தில் சின்னது பெரிது என்று வித்தியாசம் உண்டா? ஏன் அப்பா! நான் சொல்வது சரிதானே?" என்று கேட்பார்.

அன்றொரு நாள் ஒரு சண்டைக்காரன், "சார்! நாற்பது மைல் ஒரு நீளமா? முழங்கை அகலத்தில் இருப்புப் பாதை! அதில் ஓடும் பெட்டிகளோ குழந்தைகளின் விளையாட்டுப் பொம்மை போன்ற பெட்டிகள்! அப்படியிருக்கும்பொழுது இது சின்னப்பாதை இல்லாமல் பெரிய பாதை ஆகிவிடுமோ? குருடன்கூட இதைப் பெரிய பாதை என்று சொல்ல மாட்டானே, ஐயா!" என்று சொல்லி விட்டான்.

•

ஸ்டேஷன் மாஸ்டருக்குக் கோபத்தினால் உதடுகள் துடித்தன. "நாற்பது மைலாயிருந்தால் என்ன? அதற்காக நீங்கள் ஐம்பது மைல் வாடகையை அள்ளிக் கொடுத்து விட வில்லையே, ஐயா! சின்னஞ் சிறு பெட்டிகள் என்கிறீர்களே! அதற்காகப் பெட்டியில் இடத்தைக் கொஞ்சமாகவா அடைத்துக் கொண்டு உட்காருகிறீர்கள்?" என்று கொதிப்புடன் கேட்டார்.

"அதற்காக என்ன ஐயா?" என்றான் ஆட்சேபணையை எழுப்பிய அந்த மனிதன்.

அப்பொழுது ஸ்டேஷன் மாஸ்டர் கொஞ்சம் சாந்தத்தை வரவழைத்துக் கொண்டு, "போதும், ஐயா! பேசாமல் இரும். ரெயில்வே லயின் இஸ் ரெயில்வே லயின். சின்னது பெரிசு என்கிற பேச்சுக்கே இதில் இடம் இல்லை. புரிந்ததா? இதன் தண்டவாளங்களும் இரும்பால் ஆனவைதான். அதன் தண்டவாளங்களும் இரும்பால் ஆனவைதான். இங்கேயும் என்ஜின்தான் இழுக்கிறது. அங்கேயும் என்ஜின்தான் இழுக்கிறது. இந்த என்ஜினும் புகை விடுகிறது, அந்த என்ஜினும் புகை விடுகிறது. புரிந்ததா? அப்படியிருக்கும் பொழுது இதில் சின்னது-பெரிசு என்கிற பேச்சுக்கே கொஞ்சங்கூட இடம் இல்லையே, ஐயா!" என்று சொல்லியவாறே ஸ்டேஷன் மாஸ்டர் தம் அறைக்குள் சென்று விட்டார்.

அப்பொழுது அந்த மனிதன் பக்கத்திலிருந்த மற்ற பிரயாணிகளிடம், "இந்தப் பாதை சின்னதாயிருந்தால் என்ன? நம் ஸ்டேஷன் மாஸ்டர் சின்னவர் இல்லை. எத்தனை பருமனான சரீரத்தைப் பகவான் இவருக்கு அளித்திருக்கிறார், பாருங்கள்! பெரிய லயனில் போகும் என்ஜின் சத்தம் இவருடைய சத்தத்துக் கெதிரே எந்த மூலை? இவருடைய சத்தத்துக்கெதிரே அந்த என்ஜினின் சத்தம் உறை போடக் காணுமா?" என்றான்.

இதைக் கேட்டு எல்லாப் பிரயாணிகளும் ஏக காலத்தில் 'கட கட' வென்று சிரித்தனர்.

உண்மையிலேயே ஸ்டேஷன் மாஸ்டரின் சரீர ஆகிருதி விசித்திரமானதுதான். எத்தனைக் கெத்தனை பருமனோ, அத்தனைக்கத்தனை உடலில் கருமை ஏறி யிருந்தது. முகம் எப்படி என்கிறீர்கள்! ஒழிந்த வேளையில் படைக்கும் தொழிலை ஏற்றுக் கொண்டுள்ள பிரமன் சுத்தியை எடுத்து நாற்புறமும் தட்டிக் கொட்டிச் சிருஷ்டித்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஸ்டேஷன் மாஸ்டரின் ரஸ ஈயச் சொம்பு போன்ற கழுத்தையும் அதன் மேல் அடிக்கொரு தரம் அசைந்தாடிக் கொண்டிருக்கும் யாழ்ப்பாணம் தேங்காய் போன்ற மண்டையின் அழகையும் என்ன வென்று வர்ணிப்பது? ஸ்டேஷன் மாஸ்டர் அநேகமாக வெற்று உடலுடன்தான் இருப்பார். சட்டை-கிட்டை போட்டுக் கொண்டு டிரஸ் செய்து கொள்ள வேண்டிய அவசியமே அவருக்கு ஏற்பட்டதில்லை. அவருக்குச் செருப்புப் போட்டுக் கொண்டும் பழக்கமில்லை. முழங்காலுக்கு மேல் ஒரு வேஷ்டி கட்டிக் கொண்டிருப்பார். அவ்வளவுதான்! அவரை அடையாளம்

தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் இவ்வளவு அடையாளம் போதாதா?

டிரஸைப் பற்றிய பேச்சு எப்பொழுதாவது எழுந்தால், உடனே அவர், "அடேயப்பா! என்ன வெய்யில்! என்ன உஷ்ணம்! இந்தத் தகிக்கும் வெய்யிலில் எவனாவது அல்பக்காத் கோட்டையும் சட்டையையும் மாட்டிக் கொள்வானோ? இந்தப் புழுக்கத்தில் ஏதாவது போட்டுக் கொண்டால் என் மூச்சே திணறி இருதயமே வெடித்து விடும். அது மட்டும் இல்லை, அப்பா! நாடறிந்த பாப்பானுக்குப் பூணூல் எதற்கு? ஹஹ்ஹஹ்ஹா!" என்று சொல்லிச் சிரித்துவிட்டு, "நானோ பத்தாம் பசலி ஆசாமி. இந்த லயனில் ஆதி காலத்திலிருந்தே இருக்கிறேன். ஆதி காலம் என்றால் ஆதி காலம் இல்லை. அதாவது நான் பிறந்தது முதற்கொண்டு இங்கேயே இருக்கிறேன். அப்படியிருக்கும் பொழுது இங்கே என்னைத் தெரியாதவர் யார் இருக்க முடியும்?" என்பார்.

"அது சரி, யாராவது ஒரு புதிய மனிதன் வந்தால், நீங்கள்தான் ஸ்டேஷன் மாஸ்டர் என்பதை எப்படிப் புரிந்து கொள்ளுவான்?"

"அப்பொழுதா?" என்று கேட்டவாறே, "இதோ, பார்! இது என் மணி மகுடம். இது சொல்லிவிடும்!" என்று சொல்லித் தலையில் தம் கறுப்புத் தொப்பியை எடுத்துக் கவிழ்த்துக் கொண்டு 'ஹஹ்ஹஹ்ஹா!' என்று சிரிப்பார்.

உடலில் ஒன்றும் கிடையாது, கால்களிலும் ஒன்றும் கிடையாது, தலையில் மட்டும் கறுப்புத் தொப்பி! கறுப்பு, கறுப்பு! எல்லாம் ஒரே கறுப்பு! அட்டக் கறுப்பு!

ஹிஹ்ஹி! ஸ்டேஷன் மாஸ்டர் சிரித்துக் கொண்டே, "மகுடம் மிக மிக முக்கியமான பொருள். தெரியும் அல்லவா? பளாஸிச் சண்டையில் சிராஜுத் தௌலாவின் மகுடம் கீழே விழுந்து விட்டது. அதனால் என்ன ஆயிற்று, தெரியுமா? எல்லாம் அழிந்தது; ஒழிந்தது. ராஜாவின் மகுடத்தைக் காணவில்லை. அப்புறம் அங்கே நின்று கொண்டிருப்பதற்கு வீரர்களுக்கு அப்படி என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?" என்று சொல்லிக்கொண்டே வருபவர் சற்று நிற்பார். அப்புறம் 'அஹ்ஹஹ்ஹா!' என்று சிரித்துக் கொண்டே, "எங்கள் காலத்துப் புத்தகங்களிலே இதெல்லாம் எழுதியிருந்தது. என்ன அழகான புத்தகங்கள், தெரியுமா? அந்தக் காலத்து ஆங்கிலம் இருக்கிறதே, ஆகா! ட்விங்கிள் ட்விங்கிள் லிட்டில் ஸ்டார்! ஆகா! என்னத்தைச் சொல்வது?" என்று மெய் மறந்து சொல்லிக் கொண்டே போவார்.

அன்றொரு நாள் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது 'டக், டக், டக், டக்!' என்று தந்தி மணி அடித்தது. ஸ்டேஷன் மாஸ்டர் ஒரே பருந்துப் பாய்ச்சலாகப் பாய்ந்து தன் பருத்த கையினால் அழுத்தினார். கிட், கிட், கிட், கிட்! பிறகு உரக்க, "ஏ ஜம்பு! ஓ ஜம்பு!" என்று கூப்பிட்டார்.

யாரும் பதில் அளிக்கவில்லை. அப்பொழுது ஸ்டேஷன் மாஸ்டர் பிளாட்பாரத்துக்கு வந்து "ஜம்பு, ஓ ஜம்பு!" என்று மறுபடியும் உரக்கக் கூப்பிட்டார்.

அப்பொழுதும் ஜம்பு வரவில்லை. ஆனால் அவருடைய அந்தக் கூப்பாட்டைக் கேட்ட நான்கு பெண்கள் எங்கிருந்தோ ஓடோடியும் வந்து சேர்ந்தனர்.

"இன்று நான் மணி அடிப்பேன்!"

"கூடாது! நான்தான் மணி அடிப்பேன்!"

"ஊஹூம். இன்றைக்கு நான்......"



"அப்பா! நான் மணி அடிக்கிறேன், அப்பா!"

எட்டு வயதிலிருந்து ஐந்து வயது வரையில் உள்ள அந்த நால்வரும் அவருடைய பெண்கள். ஒருவருக்கொருவர் உயரத்தில் இரண்டு இரண்டு அங்குலம் குறைவானவர்கள். ஜாடிக் கடையில் விற்பனைக்காக ரகவாரியாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் கறுப்புப் பறங்கிக்காய் ஜாடிகளின் நினைவுதான் அவர்களைப் பார்க்கும் பொழுது வரும். எல்லாப் பெண்களின் நிறமும் நல்ல தார்க் கறுப்பு. குயவனின் சூளையிலிருந்து உருக்குப் பாய்ந்தபின் எடுக்கப்பட்ட காளியின் நான்கு சிலைகள், எப்படியோ உயிர் பெற்று நடமாடத் தொடங்கி விட்டனவோ என்று எண்ணத் தோன்றும்.

ஸ்டேஷன் மாஸ்டர் எல்லோரையும் தடுத்து, "சரி, சரி, ஒவ்வொருவரும் ஒவ்வொரு தடவை அடியுங்கள். ஆமாம், ஒவ்வொரு தடவைதான் அடிக்க வேண்டும். அதற்குமேல் அடிக்கக் கூடாது. என்ன, புரிந்ததா?' என்றார்.

"இவர்கள் எல்லோரும் உங்கள் குழந்தைகள்தானோ?" என்று அப்பொழுது யார் கேட்டார்களோ, தெரியாது.

ஸ்டேஷன் மாஸ்டர் சிரித்துக் கொண்டு, "ஆமாம், ஸார்! இவர்களைத் தவிர இன்னும் மூன்று பேர் இருக்கிறார்கள். அவர்கள் வீட்டில் இருப்பார்கள். இவர்கள் பெயரைக் கேட்கிறீர்களா? இதோ இருக்கிறானே, இவன்தான் நாந்தி. இவள் மாந்தி, இவள் பாந்தி. இந்த மாதிரி ஏதாவது அசட்டுப் பிசட்டு என்று பெயர் வைத்துப் படைத்தவனைப் பரிகசித்து அவமதிக்க வேண்டும், அவமானம் தாளாமல் மேலும் மேலும் அவன் என்மேல் 'டிக்ரி' ஜாரி செய்யாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே நான் இந்த யுக்தியைக் கையாண்டேன். ஆனால் யார் ஸார் கேட்கிறார்கள்? அதற்குப் பிறகு காந்தி பிறந்தான். அப்புறம் சாந்தி வந்தாள். சாந்தி வந்தாளே யொழிய எனக்குச் சாந்தி கிட்டவில்லை. அதற்குப் பிறகு அடுத்தவளும் பிறந்து விட்டாள். என்ன பெயர் வைப்பது என்று மனப் பிராந்தியுடன் சிந்தாக்கிராந்தனாய் யோசனையில் ஆழ்ந்தேன். உடனே பிராந்தி என்றே பெயர் வைத்து விட்டால் என்ன என்று எண்ணி அதே பெயரை வைத்தேன். அப்புறமும் பிரும்மா சும்மா இருக்கவில்லை. ஆகவே, நான், 'மிஸ்டர் பிரும்மா! நீர் செய்வது ரொம்பத் தவறு. எதற்கும் ஒரு எல்லை வேண்டும்!' என்று கூட எச்சரித்தேன். ஏழை சொல் அம்பலம் ஏறினால்தானே? அந்தப் பாழும் பிரும்மா என் பேச்சைக் காதில் வாங்கிக் கொண்டால்தானே? இன்னும் ஒன்றை அனுப்பி விட்டார். இனிமேல் நான் என்ன பெயரை வைக்கிறது? இப்படி என் மேல் அநியாயமும் பலாத்காரமும் செய்தால் நான் என்ன செய்வது? இனி இதை முழு மூச்சுடன் எதிர்த்துத்தான் ஆக வேண்டும். இந்த அநியாயத்துக்கு இப்படியே இடம் கொடுத்து வளர விட்டால் கட்டாது. எனவே, எப்படியாவது ஒரு முடிவு கட்டித்தான் ஆகவேண்டும். இப்படிக் குடும்பம் பெருகிக் கொண்டு போனால், நம் வீட்டில் இருக்க இடம் இராது என்று தோன்றியது. உடனே புரட்சி என்னும் பொருள் தரும் 'கிராந்தி' என்னும் பெயரையே வைத்து விட்டேன். இந்தத்தடவை என் புரட்சிக்கு பலன் கிட்டும் என்று எண்ணினேன் ஆனால்..." என்று சொல்லிய வண்ணம் மணிக்கு அருகில் சென்றார். "இங்கே கொண்டு வா, ஒரு தடவை பலமாக அடித்து விடுகிறேன்" என்று சொல்லிப் பெண்ணிடமிருந்து சுத்தியை வாங்கிக் கொண்டார். அவர் இரும்புக் கையின் அடி பொறுக்கமாட்டாமல் 'டணண் டண் ண் ண்' என்று அந்த மணி அலறியது.

கட் கட், கட் கட்.! ஸ்டேஷன் மாஸ்டர் டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்தார்.

"இன்னும் யாராவது? இன்னும் யாராவது டிக்கட் வாங்க வேணுமா? டிக்கட் யாருக்காவது வேண்டுமா?" என்று ஸ்டேஷன் மாஸ்டர் ஜன்னலுக்குள்ளிருந்து கேட்டார்.



"மழையே பெய்யாததினாலே என் வியாபாரம் மோசமாய்ப் போச்சுங்க!"

"நீங்க என்ன வியாபாரம் செய்றீங்க ஐயா?"

"குடை வியாபாரங்க!"

---

ஸ்டேஷனுக்கு வெளியே பஸ் டிரைவர் விடாமல் ஹாரன் அடித்த வண்ணம், 'வாருங்கள், வாருங்கள்! பஸ் புறப்படப் போகிறது. ஜல்தி வாருங்கள்! ரெயில் சார்ஜைக் காட்டிலும் ஓரணா குறைச்சல்! ஓடி வாருங்கள்!" என்று குரல் கொடுத்துக் கொண்டிருந்தான்.

அந்தச் சத்தத்தைக் கேட்டதுதான் தாமதம், ஸ்டேஷன் மாஸ்டர் படீரென்று அறைக் கதவைச் சாத்தி விட்டு வெளியே வந்தார். பஸ்காரன் ஸ்டேஷனுக்குள் வந்து ஒரு கிழவனைப் பஸ்ஸில் ஏற்றிக் கொள்வதற்காகக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகும் காட்சியை அவர் கண்டார். அதைக் கண்டதும் அவருக்கு உள்ளம் பற்றிக் கொண்டது. இந்தப் பஸ்காரர்களின் காரணமாகத்தானே ரெயில் பிரயாணிகளின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போகிறது? வரும்படி குறைவு என்பதற்காக இந்த ஸ்டேஷனை மூடி விடப் போவதாகக் கூட வதந்தி உலவிக் கொண்டிருந்தது.

ஒரு கணம் நின்று பார்த்தார். பிறகு தலையை அசைத்துக் கறுவிக் கொண்டு ஓரே ஓட்டமாக ஓடிக் கிழவனின் இன்னொரு கையைப் பிடித்துத் தன் பக்கம் இழுத்தவாறு, "நீ ரெயிலில்தான் போய் ஆக வேண்டும். நீ இவ்வளவு நேரம் எதற்காக ஸ்டேஷன் கட்டடத்தில் உட்கார்ந்திருந்தாய்? எதற்காக மூட்டையை இங்கே வைத்திருந்தாய்? நீ வண்டியில்தான் போக வேண்டும்!" என்றார்.



தண்ணீர் சப்ளை குறையப்போகும் செய்தியைக் கேட்ட ஸ்ரீமான் கார்ப்பரேஷன் குழாய் இரண்டு சொட்டுக் கண்ணீர் வடிக்கிறார்!

"ஸ்டேஷன் மாஸ்டர் ஸார்! இவனை விட்டு விடுங்கள். எதற்காக வீண் பலாத்காரம் செய்கிறீர்கள்? இவன் ரெயிலில் போகப் போவதில்லை. பஸ்ஸில்தான் போகப் போகிறான்" என்று பஸ்காரன் கத்தினான்.

ஸ்டேஷன் மாஸ்டருக்கு இன்னும் கோபம் வந்து விட்டது. "இங்கிருந்து போய் விடு. ஸ்டேஷனுக்குள் நீ யாருடைய உத்தரவின் பேரில் காலடி எடுத்து வைத்தாய்? இங்கிருந்து பிரயாணிகளைப் பஸ்ஸுக்கு இழுத்துச் சென்று கம்பெனிக்கு நஷ்டம் உண்டு பண்ணப் பார்க்கிறாயா? மரியாதையாக வெளியில் போய் விடு!" என்று சொல்லி விட்டுக் கிழவனைத் தம் பக்கம் இழுத்தார்.

"கம்பெனிக்காரன் உனக்கு என்ன அப்பனா?"

"ஆமாம், என் அப்பன்தான். கிழவனை விட்டு விடு. இல்லாவிட்டால் போலீஸைக் கூப்பிடுவேன். ஆமாம், சொல்லி விட்டேன்!"

இங்கே இந்த இழுத்துப் பறித்தல் நடந்து கொண்டிருந்த பொழுது, ரெயில் வண்டி பலத்த சத்தம் போட்டுக் கொண்டு பிளாட்பாரத்தில் வந்து நின்றது.

ஸ்டேஷன் மாஸ்டர் பலமாக ஒரு இழுப்பு இழுக்கவே, கிழவன் அவருடன் வந்து விட்டான். பஸ்காரன் அவனை விட்டு விட்டுப் போய் விட்டான். ஸ்டேஷன் மாஸ்டர் கிழவனின் மூட்டை முடிச்சுக்களை அவசரம் அவசரமாகத் தாமே தூக்கிக் கொண்டு, அவனையும் இழுத்துக் கொண்டு ரெயிலை நோக்கி ஓடினார். பிறகு எதிரிலிருந்த பெட்டி ஒன்றில் அவனைத் தள்ளித் திணித்து அவன் மூட்டையையும் அவன் கையில் கொடுத்துக் கையை அசைத்து, "எடு, காசை! உம், சீக்கிரம்!" என்றார்.

இதே சமயம் முதல் வகுப்புப் பெட்டியின் ஜன்னலிலிருந்து, "ஸ்டேஷன் மாஸ்டர்!" என்ற குரல் வந்தது.

டிரைவரும் கார்டும் ஆவலுடன் 'லயன் கிளியர்' ஆவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால் ஸ்டேஷன் மாஸ்டரின் கவனம் அதில் இருந்தால் தானே? அவருடைய கவனம் முழுவதும் கிழவன் பக்கம் அல்லவா திரும்பி இருந்தது?

வண்டி புறப்படுவதற்குத் தாமதம் ஆகவே, கார்டு ஓட்டம் ஓட்டமாக ஸ்டேஷன் மாஸ்டரிடம் ஓடி வந்து, "என்ன ஐயா இது? உம்மை வைத்துக் கொண்டு மாரடிக்க...நல்ல மனுஷ்யர் ஐயா நீர்! சீக்கிரம் 'லயன் கிளியர்' கொடும், ஐயா! வண்டியில் புதுத் துரை உட்கார்ந்திருக்கிறான். நீர் என்னடா என்றால்... அதோ பாரும்!" என்று சொல்லி முதல் வகுப்புப் பக்கம் சுட்டிக் காட்டினான்.

அப்புறம்தான் ஸ்டேஷன் மாஸ்டர் இந்த உலகத்து நினைவுக்கு வந்தார். ஒரே 'காபரா' வுடன் வீட்டை நோக்கி ஓடினார்.

வண்டிக்கு நேரம் ஆகிக் கொண்டிருந்தது. முதல் வகுப்பில் உட்கார்ந்திருந்த அதிகாரி "எங்கே அப்பா, ஸ்டேஷன் மாஸ்டர்?" என்று அதிகார தோரணையில் கேட்டார்.

"எஸ் ஸார்!"

"ஸ்டேஷன் மாஸ்டர்!"

"எஸ் ஸார்!"-ஸ்டேஷன் மாஸ்டர் மிகுந்த 'காபரா'வுடன் பதில் அளித்தார்.

தலையில் தொப்பி இருந்தது. இரண்டு கைகளாலும் இடுப்புச் சுட்டை இழுத்து விட்டுக் கொண்டார். எப்படியோ அவசரம் அவசரமாக டிரைவருக்கு 'லயன் கிளியர்' கொடுத்தார். அப்புறம் "ஆல் ரைட்!" என்ற சொல் அவருடைய முகத்திலிருந்து வந்தது.

என்ஜின் ஊதிக்கொண்டு கிளம்பியது. வண்டிகள் ஊறத் தொடங்கின. ஒவ்வொரு பெட்டியாக முன்னேறலாயின. மூன்றாம் வகுப்புப் பெட்டிகள் தீர்ந்து இண்டர் பெட்டிகள் வந்தன. அப்புறம் இரண்டாவது வகுப்புப் பெட்டியும் தாண்டிச் சென்றது. முதல் வகுப்புப் பெட்டி எதிரே வந்ததும் ஸ்டேஷன் மாஸ்டர் சட்டென்று குனிந்து ஒரு 'ஸெல்யூட்' வைத்தார், அந்த முதல் வகுப்புப் பெட்டிக்கு!

"ஸ்டேஷன் மாஸ்டர்!" என்று பின்னாலிருந்து குரல் வந்தது.

திடுக்கிட்டு ஸ்டேஷன் மாஸ்டர் பின் பக்கம் திரும்பிப் பார்த்தார். துரை நின்று கொண்டிருந்தார்.

(அடுத்த இதழில் முடியும்)

# For healthy Skin

insist on

MARGO SOAP

THE GENUINE NEEM OIL SOAP

A *Calchemico* PRODUCT

மதராஸ் ஆபீஸ்:

**5/149, பிராட்வே**

**ஜி. டி., மதராஸ்**

புதுமை பெறுங்கள்!

மிருதுத் தன்மை பெறுங்கள்!

நீடித்த இனிமையுடன் இருங்கள்!

புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணமுள்ளது.




# விளம்பரதாரர்களே...

## நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகைப் பற்றிய உண்மையை உணருங்கள்!

ஒரு விளம்பரதாரர் என்ற முறையில் நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு ரூபாய்க்கும் எவ்வளவு வாசகர்களை நீங்கள் பெறுகிறீர்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டியது மிக அவசியம்.

125 பிரதான பத்திரிகைகளுக்கு மேலாக இப்போது சர்குலேஷன் ஆடிட் பீரோவில் அங்கம் வகிக்கின்றன. இந்தியா, பாகிஸ்தான். சிலோன் ஆகிய நாடுகளில் 13 பாஷைகளில் ஒரு தேசிய விளம்பர திட்டத்தை பரிபூரண அம்சத்தில் நிறைவேற்றப் போதுமான பத்திரிகைகள். இவைகளின் பத்திரிகை விற்பனைக் கணக்கு எந்த சமயத்திலும் இந்த **A. B. C.** யின் ஆடிட்டர்களால் சரிபார்க்கப்பட்டு, **ABC** மெம்பர்களுக்கு அரை வருஷ ரகசிய சர்டிபிகேட்டுகளாக அனுப்பப்படுகிறது.

உங்கள் விளம்பரத்திற்கு உபயோகிக்கும் பத்திரிகையைப் பற்றிய உண்மையை நீங்கள் அறிய விரும்பினால் **ABC** மெம்பர் ஆக இன்றே எழுதுங்கள்!

**ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் லிட்.,**
**முபாரக் மன்ஸில், அபோலோ தெரு, கோட்டை, பம்பாய்.**

கீழ்க்கண்ட விளம்பரதாரர்களும், விளம்பர ஏஜண்டுகளும் ஏற்கெனவே **ABC** யின் மெம்பர்களாக இருக்கிறார்கள்.

### விளம்பரதாரர்கள்

அல்லைடு போட்டோகிராபிக்ஸ் லிட்., E. M. ஆல்காக் & மொஹெராட்டா லிட்., ஆஸ்ப்ரோ லிட்., இங்கிலாந்து, அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட்., பால்மர் லாரி & கோ. லிட்., பம்பாய் மியூச்சுவல் லைப் அஷ்யூரன்ஸ் சொஸைடி லிட்., பூட்ஸ் பியூர் ட்ரக் கோ. (இந்தியா) லிட்., பர்மா ஷெல் ஆயில் ஸ்டோரேஜ் & டிஸ்ட்ரிப்யூட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்., கால்டெக்ஸ் (இந்தியா) லிட்., ஸெண்ட்ரல் டீ போர்டு, கார்ன் ப்ராடெக்ட்ஸ் கோ. (இந்தியா) லிட்., டன்லப் ரப்பர் கோ. (இந்தியா) லிட்., க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) லிட்., கோத்ரெஜ் & பாய்ஸ் மானுபாக்சரிங் கோ. லிட்., இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிட்., இம்பீரியல் டுபாக்கோ கம்பெனி ஆப் இந்தியா லிட்., இந்தியா டயர் & ரப்பர் கோ. (இந்தியா) லிட்., லீவர் பிரதர்ஸ் இந்தியா லிட்., லிப்டன் லிட்., முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிட்., நாஷனல் கார்பன் கோ. (இந்தியா) லிட்., பார்லி ப்ராடக்ட்ஸ் மானுபாக்சரிங் கோ. லிட்., பஞ்சாபி சந்து ஹல்வாய் கராச்சிவாலா, ஷாலிமார் பெயிண்ட், கலர் & வார்னிஷ் கம்பெனி லிட்., டாடா ஆயில் மில்ஸ் கோ. லிட்., வால்கார்ட் பிரதர்ஸ்.

### விளம்பர ஏஜண்டுகள்

அட்வர்டைஸிங் & ஸேல்ஸ் பிரமோஷன் கோ., எவரஸ்ட் அட்வர்டைஸிங் லிட்., கிராண்ட் அட்வர்டைஸிங் இன்க்., கிரீன்ஸ் அட்வர்டைஸிங் சர்வீஸ் ஏஜண்ட்ஸ், D. J. கீமர் & கோ. லிட்., லின்டாஸ் லிட்., நேஷனல் அட்வர்டைஸிங் சர்வீஸ் லிட்., பிரஸ் ஸிண்டிகேட் லிட்., ஷில்பி லிமிடெட், ஸிஸ்டாஸ் லிட்., F. D. ஸ்டூவர்ட் லிட்., L. A. ஸ்ட்ரோனக் & கோ. (இந்தியா) லிட்., J. வால்டர் தாம்ஸன் கம்பெனி (ஈஸ்ட்ரன்) லிமிடெட்.

**"கல்கி"**

**A. B. C. யின் தணிக்கை பெற்ற விற்பனை கொண்ட பத்திரிகை**

# நிறைவு எங்கே?

## எஸ். கிருஷ்ணன்

ஆதியூரில் நண்பர் சிதம்பரம் நடத்தி வரும் ஆனந்த நிலயத்தின் வருஷாந்திர விழாவுக்கு வருமாறு சென்ற மூன்று வருஷங்களாக அழைப்புக் கிடைத்தும் என்னால் போக முடியவில்லை. இந்த வருஷம்தான் போக முடிந்தது.

ஆனந்த நிலயம் என்ற சொல்லின் பொருளை உணர அங்கே வசித்துக் கல்வி பயின்று கொண்டிருந்த ஐந்நூறுக்கு மேற்பட்ட சிறுவர் சிறுமியரைப் பார்த்தால் போதும். அவர்களது மலர்ந்த முகங்களையும் கலகலத்த சிரிப்பையும் பார்த்த நான், "பிள்ளைப் பிராயத்தை இழந்திரே நீர், பின்னும் அந் நிலை பெற வேண்டுமோ !" என்ற பாரதியாரின் கேள்வியை நினைப்பூட்டுவதாகச் சிதம்பரத்திடம் குறிப்பிட்டதும் அவர், "ஆம், பரசுராம்! வாழ்க்கையின் கசப்பான அனுபவங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள நிரந்தரமான பிள்ளைப் பருவத்தைக் காப்பாற்றிக் கொள்ளக் கூடுமானால்......" என்றார்.

சிதம்பரம் எதையோ சிந்தித்துக் கொண்டு சில நிமிஷம் நின்றுவிட்டுத் தூங்கி விழித்தவர்போல், "எவ்வளவோ வேலை யிருக்கிறதே !" என்ற வண்ணம் எழுந்து சென்றார்.

அன்று மாலை அந்தக் குழந்தைகள் அனைவரையும் மைதானத்தில் அணிவகுத்து நிற்க வைத்து விட்டு, "அருமைக் குழந்தைகளே ! இந்த நிலயத்திலிருந்து நீங்கள் வெளியேறிப் பரந்த உலகில் எங்கு சென்றாலும் எந்தச் சந்தர்ப்பம் ஏற்பட்டாலும் பிறருக்கு ஆனந்தம் அளிக்கவே முயல வேண்டும். 'இன்னல் வந்துற்றிடும் போததற் கஞ்சோம்' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு துணிந்து கருமம் செய்ய வேண்டும். நீலகண்டனைப்போல் விஷத்தை அருந்தி அமுதத்தை உலகிற்கு அளிக்கும் திறனை ஆண்டவன் உங்களுக்கு அளிப்பானாக!" என்று வாழ்த்தினார்.

மறுநாள் காலை சிதம்பரம் என்னிடம் ஆனந்த நிலயத்தின் வரலாற்றை எடுத்துக் கூறியபோது நான், "நேற்று நீங்கள் குழந்தைகளிடம் நீலகண்டன் விஷத்தை உண்டு அமுத மாக்கியதைச் சொல்லியிருக்க வேண்டாம். ஏனெனில் இந்த வயதிலேயே அவர்கள் உள்ளத்தில் பொருளற்ற ஒரு திகிலுக்குக் காரணம் ஏற்படக் கூடும் அல்லவா !" என்று சொல்லி வைத்தேன்.

சிதம்பரம் புன்முறுவலுடன், "உலகம் இன்பமயம் என்ற கற்பனைக் கோட்டை கட்டிக் கடைசியில் துன்பத்தைக் கண்டு துவண்டு விழுவதை விட இப்பொழுது முதலே மனத்தில் தெளிவாகச் சில அபிப்பிராயங்களைப் பதிய வைத்துக் கொண்டு சிறுவர் சிறுமியர் தம் வாழ்வை ஆரம்பிப்பதே மேல் என்பது என் கருத்து" என்றார்.

"அப்படி யென்றால் !"

"பரசுராம், நீங்கள் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த உல்லாசப் பிரியனான சிதம்பரத்தைத்தான் பார்த்திருக்கிறீர்கள். அந்தச் சிதம்பரம் உலகத்தைத் தன் களியரங்கமாக எண்ணியே சிறு வயது முதல் வளர்ந்தான். பிறகு ஏமாற்றத்தால் வாடித் துவண்டுபோன சிதம்பரத்தை நீங்கள் பார்க்கவில்லை. இப்பொழுது நீங்கள் பார்க்கும் சிதம்பரம் அனுபவத்தின் புயலில் அடிபட்டுச் சாய்ந்துபோன மரம். அதற்கு ஊன்றுகோல் போல் முழுவதும் தரையில் படுத்து விடாமல் தாங்கி நிற்பவர்கள் இந்தப் பள்ளிச் சிறுவர்கள். நான் என் வாழ்க்கையின் ஒரு அம்சத்தைச் சொன்னால்தான் அது உங்களுக்கு விளங்கும்" என்று சொல்லிச் சற்றுத் தயங்கியபின் தொடர்ந்தார் :—

இன்றைக்கு எட்டு வருஷங்களுக்கு முன் நான் மதுரையில் ஒரு பெரிய மோட்டார் கம்பெனியின் மானேஜர். எழுநூறு ரூபாய் சம்பளம். தல்லா குளத்தில் பங்களா, 'அழகிய மனைவி. என் ஆதரவை எதிர்பார்த்து நிற்கத் தேவையில்லாமல் நிறையச் சொத்து அவளுக்குப் பிறந்தகத்திலிருந்து கிடைத்திருந்தது. ஆனால் அதை எண்ணி அவள் பெருமைப் படவில்லை. சாந்தமாய் அவள் வாழ்ந்ததைப் பார்த்தபோது நான் உள்ளத்தில் கற்பனை செய்த என் லக்ஷிய மனைவியை அடைந்து விட்டதாகவே எண்ணி மகிழ்ந்தேன்.

ஆனால் மனிதனுடைய இன்ப உணர்ச்சியைத் துன்பமாக எப்பொழுது எந்த விதத்தில் விதி மாற்றுகிறது என்பதை உணரக் கூடுமானால் மனிதன் முன் எச்சரிக்கையாக அந்த இன்பத்தை நாடாமலே இருந்து விடுவான் அல்லவா !

எனக்கு விவாகமாகி ஒரு வருஷத்துக்குள் என் மனைவியின் பாட்டி இறந்து விடவே, நான் விஜயாவுடன் மாமனார் வீடு செல்லவேண்டியதாயிற்று. அங்கே சென்ற இரண்டு நாட்களுக்கப்புறம் ஒரு நாள் நான் மத்தியானம் மாடி வராந்தாவில் நின்று கொண்டு பள்ளிக்குச் சென்று கொண்டிருந்த மாணவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவர்களைப் பெற்றெடுத்து வளர்த்து வரும் தாய்மார்கள் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் ! அந்தப் பெற்றோரிடம் அந்தக் குழந்தைகள் எவ்வளவு அன்பையும் ஆதரவையும் அடைகின்றன ! —சிறு வயதில் தாயை இழந்துவிட்ட நான் இந்த மாதிரி எண்ணங்களில் சிக்கி, நாமும் ஒரு தந்தையாகி நம் குழந்தைக்கு இன்பமூட்டும் நாள் என்றைக்கு வருமோ என்று கற்பனை செய்து கொண்டிருந்தபோது, கீழே மாடிப் படியருகில் யாரோ பேசும் குரல் கேட்டது. என் மனைவியின் குரல் போலிருக்கவே உற்றுக் கவனித்தேன் "நீ என்ன செய்வதாக உத்தேசம், அம்மாஞ்சி !" என்று கேட்டுக் கொண்டிருந்தாள் என் மனைவி. "அது தான் எனக்கும் தெரியவில்லை, விஜயா ! நீ உன் புருஷனுடன் வாழத் தொடங்கி உன் அம்மாஞ்சியை மறந்து விட்டது போல் நானும் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டு அத்தங்காரை மறந்துவிடலாமா என்றுதான் யோசிக்கிறேன்" என்று ஒரு ஆண் குரலும் அதைத் தொடர்ந்து கலகலப்பான சிரிப்பொலியும் கேட்டது. பிறகு சில கணம் மௌனமாயிருந்த பின் அந்த ஆண் குரல், "என் யோசனை சரிதானே, விஜயா!" என்றதும், "ஆமாம், அப்படியே செய். என்னை மறப்பதில் உனக்குப் பரிபூரண வெற்றி கிடைக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை. கணவருடன் பூரணமாக ஐக்கியமாகி விடும் திறமை எனக்குக் கிடைக்க வேண்டும் என்று நீ ஆசி கூறு, அம்மாஞ்சி !" என்று மறுமொழி கூறினாள் விஜயா.

"உன் பெயருக்கேற்ப நீ எடுக்கும் முயற்சி வெற்றி பெற வேண்டும். அது முடியாவிட்டால்

நமக்குக் கடவுள் கொடுத்த விவேகத்துக்குப் பொருள்தான் என்ன!" என்று கேட்டான் விஜயாவின் அம்மாஞ்சி.

நான் இந்தச் சம்பாஷணையைக் கேட்காமலிருந்தால் என் வாழ்க்கையின் போக்கு விசேஷ மாறுதலில்லாமல் போயிருக்கக்கூடும். ஆனால் தலையில் எழுதின எழுத்தை அழிக்கவா முடிகிறது! நான் கலியாணத்தின் போது விஜயாவின் அம்மாஞ்சியைப் பார்த்திருந்தேன். அவனுக்கு விஜயாவைக் கலியாணம் செய்து கொடுக்க உத்தேசித்திருந்ததாகவும் ஆனால் பொருத்தமில்லாமல் போகவே, விஜயாவை எனக்கு விவாகம் செய்து கொடுத்ததாகவும் கூடக் கேள்விப்பட்டிருந்தேன். ஆனால் அந்தத் தகவலைக் கொண்டு விஜயாவைச் சந்தேகிக்கும்படி அவள் ஒரு வருஷ காலத்தில் ஒரு தடவையேனும் நடந்து கொள்ளவில்லை. ஆனால் இன்று நடந்த சம்பாஷணையிலிருந்து அவள் என்னிடமிருந்து இன்னும் விலகியே நிற்கிறாள் என்பது நன்கு விளங்கிவிட்டது. அதற்காக நான் விஜயாவிடம் விபரீதமாக நடந்துகொள்ள விரும்பவில்லை. என்னை அவளிடமிருந்து விடுவித்துக் கொண்டு விட்டால் போதும் என்று மட்டும் எண்ணிக் கொண்டேன்.

அன்று மாலை மாடியில் எனக்குக் காப்பி எடுத்துக் கொண்டு வந்த விஜயா, "அப்பா உங்களை ஒன்று கேட்கும்படி சொன்னார். எனக்கு எழுதி வைத்தது போக மீதி சொத்தை ரகுபதிக்குக் கொடுத்து விடட்டுமா என்று உங்களிடம் கேட்டுச் சம்மதம் தெரிந்து கொள்ள விரும்புகிறார். ரகுபதி சின்ன வயதிலேயே எங்களுடன் வாழ்ந்து வருகிறவன். அப்பாவுக்கு அவன் ஒரு பிள்ளை மாதிரி!" என்று சொல்லி நிறுத்தினாள்.

"உன் தகப்பனார் சொத்து. அவர் இஷ்டப்படி செய்ய என் அபிப்பிராயம் எதற்கு விஜயா! இப்பொழுது எனக்குச் சொத்துத் தேவையில்லை. எல்லாவிதமான பந்தங்களிலிருந்தும் விடுதலை பெற்றுச் சுதந்திரமாகி விடத்தான் நான் விரும்புகிறேன்" என்றேன்.

விஜயா புன்முறுவலுடன், "இப்பொழுது மட்டும் அடிமையோ நீங்கள்!" என்றாள்.



அதற்கு நான் பதில் சொல்லாமல், "சொத்து உன் அம்மாஞ்சியைச் சேர்வது பற்றி எனக்குப் பூரண சம்மதமே. எனக்கு உன் தந்தை கொடுத்திருக்கும் செல்வமே என்னால் தாங்க முடியாதது. அளவுக்கு மீறினால் அமுதமும் நஞ்சான கதையாகி விடும்" என்றேன். கடைசி வாக்கியத்தை நான் சொல்ல விரும்பவில்லை. ஆனால் என்னையறியாமல் என் மனக் கசப்பு அச் சொற்களில் கலந்து விட்டது. ஆனால் விஜயா அந்தக் கசப்பை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

நான் விஜயாவை என்னுடன் கூட்டிச் செல்வதா அல்லது ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிப் பிறந்தகத்திலேயே விட்டுச் சென்று விடுவதா என்று யோசித்தேன். ஆனால் துக்கம் விசாரிக்க வந்த இடத்தில் தங்கக் கூடாது என்ற காரணத்தினால் விஜயா என்னுடனேயே மதுரைக்குத் திரும்பி வந்து விட்டாள்.

மதுரைக்குப் போன பிறகும் என் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. என்னிடம் அன்பில்லாமல் கடமைக்காக வாழும் விஜயாவுடன் குடும்பம் நடத்துவது முடியாத காரியம் என்று எண்ணிக் கொள்வேன். அவள் அழகி. அந்த அழகில் நான் மயங்கிப் போயிருந்தேன். அவள் யுவதி. அவளுடைய யௌவனத்தின் பூரிப்பில் நான் பிரமித்துப் போயிருந்தேன். ஆனால் அந்த அழகை நான் மதிக்கிறேன் என்பதை அவள் பொருட்படுத்தவில்லை. அந்த யௌவனத்தை அவள் ஆசையோடு என்னிடம் அர்ப்பிக்கவில்லை. கடமை என்ற சங்கிலியில் கட்டுண்ட அடிமையாகவே எனக்குக் கீழ்ப் படிகிறாள் என்ற எண்ணம் என் மனச்சாக்ஷிக்கு உலை வைத்தது.

'இந்தப் பந்தத்திலிருந்து விமோசனமே இல்லையா, பகவானே!' என்று மனதில் கேட்டுக் கொள்வேன். இரவு நேரங்களில் நான் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு நடுநிசிக்குத் தான் வீடு திரும்புவேன். கூடுமானவரை விஜயாவிடம் விலகி யிருப்பதேதான் இதன் நோக்கம்.

ஒருமுறை பெரிய குளம் சென்றிருந்தேன். அன்று இரவு நான் என் நண்பர் வீட்டிலிருந்து புறப்பட்ட பின் தான் நான் எடுத்து வந்திருந்த காரின் விளக்கு எரியாது என்பது நினைவு வந்தது. அமாவாசை இருட்டு, ஆயினும் பழகின பாதை. ஆகவே திரும்பிப் போய் விடலாம் என்று புறப்பட்டு விட்டேன். சட்டென்று கார் எங்கோ மோதுவதை உணர்ந்தேன்......

கண் திறந்து பார்த்த போது நான் ஆஸ்பத்திரியில் கட்டிலில் படுத்திருந்தேன். இரண்டு நாட்களுக்குப் பிறகுதான் என் நினைவு எனக்கு வந்தது. என் அருகில் நின்றிருந்த விஜயாவையும் அவள் தந்தையையும் பார்த்தேன். என் வாழ்க்கையைப் பாழாக்கிய இரு துரோகிகள் இவர்கள் என்று மனதில் எண்ணிக் கொண்ட நான், "எனக்கு அமைதி வேண்டும், நீங்கள் என்னை விட்டு விடுங்களேன்!" என்றேன். அதற்கு விஜயா மறுமொழி சொல்லாமல் வெளியே சென்று விட்டாள். பின்னால் அவள் தகப்பனாரும் சென்று விட்டார்.

அவர்கள் போன பின் நான் யோசித்தேன். 'நான் ஏன் இவ்வளவு மூடனாக என் உள்ளத்தைத் திறந்து காட்டினேன்! என் வேதனையை என்னுடனேயே வைத்துக் காப்பாற்றிக் கொள்ள முடியாமல் போனேனே! தனக்குப் பிரியமில்லாதவருடன் வாழ்ந்து கொண்டு ஒரு வருஷ காலமாகத் தன் உள்ளத்தை அடக்கியாளும் விஜயா ஒரு பெண், ஆனால் அவளிடம் தோல்வியுற்ற நான் ஒரு ஆண்! இருவரில் யார் மேலானவர்!'' இம்மாதிரி, என்னையே நான் இகழ்ந்து கொண்டேன்.

பதினைந்து நாட்கள் நான் ஆஸ்பத்திரியில் படுத்திருந்தேன். அந்தப் பதினைந்து நாட்களிலும் நான் விஜயாவைப் பார்க்கவில்லை. அவள் ஆஸ்பத்திரியில் தினமும் வந்து என் ஆரோக்கியத்தைப் பற்றி விசாரித்து விட்டுப் போகிறாள் என்று ஒரு நாள் டாக்டர் என்னிடம் சொன்னார்.

நான் ஆஸ்பத்திரியிலிருந்து புறப்படுவதற்கு முன் டாக்டர் என்னிடம், "மிஸ்டர் சிதம்பரம், நீங்கள் உள்ளத்தில் என்ன வேதனையைப் புதைத்து வைத்திருக்கிறீர்களோ, தெரியாது! ஆனால் அன்று ஜுர வேகத்தில் 'துரோகிகள்' என்றீர்கள். 'வாழ்க்கையின் வெற்றி, இருப்பதை வைத்துக்கொண்டு திருப்தி அடைவதில்தான் இருக்கிறது. மனிதர் இருதயத்தில் எழும் உணர்ச்சிகளைப் பிறர் கண்ணாடியில் பார்ப்பதுபோல் பார்க்கும் திறமை பெற்றால் உலகமே இல்லை. ஏதோ நீண்ட பிரயாணத்தில் பல தங்கு மடங்களில் ஒன்றான இந்த உலகிலும் நம் ஆத்மா தங்கியிருக்கிறது' என்று ஒரு கவிஞன் சொன்னதை நான் அடிக்கடி நினைத்துக்கொள்வதுண்டு" என்றார்.

அன்று காலை நான் ஆஸ்பத்திரியிலிருந்து வீடு சென்றபோது விஜயா என்னை வரவேற்றதிலிருந்து அவள் உள்ளத்தின் உணர்ச்சிகள் ஒன்றையும் நான் உணரவில்லை. அவள் முன்போல் சாந்தமாகவே காணப்பட்டாள்.

நான் டாக்டர் சொன்னதை நினைத்துக்கொண்டு வாழ்க்கையை, இருப்பதைக் கொண்டு நிரப்பி இல்லாததை எண்ணாமல் நடத்தி விடலாம் என்று எண்ணிக் கொண்டேன்.

மறுநாள் மாலையில் நான் காரில் ஆபீசுக்குப் போய் விட்டு இரண்டு மணி நேரத்துக்கப்புறம் திரும்பி வந்தேன். வீட்டின் உள் புறம் இருளடைந்து கிடந்தது. வெளியே திண்ணையில் உட்கார்ந்திருந்த வேலையாள் என்னைப் பார்த்ததும் ஒரு சாவிக் கொத்தையும் ஒரு கடிதத்தையும் என்னிடம் கொடுத்தான், வீட்டுப் பெட்டிகளின் சாவிகள் அவை. கடிதத்தை உறையிலிருந்து வெளியே எடுத்தேன். விஜயாதான் எழுதியிருந்தாள். அதற்குள் வேலையாள். "அம்மா அவசரமாகப் பிறந்த வீட்டுக்குப் போவதாகச் சொல்லிப் போனார்கள் !" என்றான்.

நான் வீட்டுக்குள் நுழைந்து விளக்கைப் போட்டு விட்டுக் கடிதத்தைப் படித்தேன். விஜயா எழுதிய அந்தக் கடிதத்தையே உங்களிடம் காட்டுகிறேன், பரசுராம் ! — இதைக்கூறிய சிதம்பரம் தன் பெட்டியைத் திறந்து ஒரு உறையை எடுத்து என்னிடம் கொடுத்தார்.

அவர் மனைவி முத்துக் கோத்தாற்போன்ற அழகிய எழுத்துக்களில் எழுதியிருந்தது இதுதான் :

"பக்தியாலும் சேவையாலும் நான் என்னை

மாண்டலேயில் தாயில்லாத அவளுக்குத் தகப்பனாரின் ஆதரவும் இல்லாதபடி ஜப்பானியர்களுடைய குண்டு செய்து விடவே, அவள் இன்னது செய்வது என்றறியாமல் தவித்தாள். அப்போது அவள் வீட்டுக்கு அடுத்த வீட்டிலிருந்த பதினெட்டு வயதுள்ள ஒரு வாலிபன் அவளையும் தன்னுடன் இந்தியாவுக்குப் புறப்பட்டு வரும்படி அழைத்தான். வேறு வழியின்றி அவள் அந்த வாலிபனுடன் கிளம்பினாள். பர்மாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே உள்ள மலைகளில் அரைப் பட்டினியோடு அவர்கள் வரும்போது அந்தப் பெண்ணுக்கு ஜுரம் வந்து விட்டது. எத்தனையோ பெற்றோர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தங்கள் குழந்தைகளைக்கூட அலக்ஷியமாகக் காட்டில் தன்னந் தனியாகத் தவிக்கவிட்டுப் போனக் கொடூரமான காட்சியை, — மனிதர்கள் மிருகங்களான காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தும்கூட அந்த வாலிபன் தனக்கு முன்பின் பழக்கமில்லாத அந்த அனாதைப் பெண்ணைத் தவிக்க விடவில்லை. ஒவ்வொரு நாளும் சில மைல் தூரமாவது தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு நடந்தான். அந்தக் காட்டுப் பாதையில் அந்தப் பெண்ணின் ஜுரத்தில் அவர்களுடைய பிரயாணம் பதினைந்து நாட்களுக்குப் பதில் முப்பது நாட்களாக நீண்டு விட்டது.

கல்கத்தாவுக்கு அவர்கள் போய்ச் சேர்ந்தபோது அந்த வாலிபனுடைய அத்தை புருஷர் அவனை எதிர்பார்த்து வந்திருந்தார். அந்த வாலிபன் தனக்கு முன்னால் ஆகாய விமானத்தில் இந்தியா சென்ற ஒரு நண்பனிடம் சொல்லியனுப்பிய தகவல் கிடைத்துத்தான் அவர் அப்படிக் கல்கத்தாவுக்கு வந்திருந்தார். அவர் அந்தப் பெண்ணையும் தன்னுடன் அழைத்துச் சென்றார். அவர் சர்க்காரில் உயர்ந்த பதவி வகிப்பவர். அந்த வாலிபனை டில்லி சர்வ கலாசாலையில் பி. ஏ. வகுப்பில் சேர்த்து விட்டு அந்தப் பெண்ணைத் தம் வீட்டில் வைத்துக் கொண்டு தம் பெண்ணாக வளர்த்தார். இரண்டு வருஷங்களுக்குப் பிறகு அவர் பென்ஷன் பெற்றுக் கொண்டு தென்னாட்டுக்குப் போன பொழுது அந்தப் பெண் அவர் ஊரில் உள்ள எல்லோருக்கும் அவருடைய பெண்ணாகவே அறிமுகமானாள்.





கணவன் :—புதிய சமையல்காரி இன்றைக்கு ரொம்ப ஜோராகச் சமைத்திருந்தாள். ரொம்ப ருசியாக இருந்தது!

மனைவி :—உம், அவளே சமைத்து விடவில்லை. நான்கூட இருந்து எல்லாம் சொல்லிக் கொடுத்தேன்!

கணவன் :—அப்படி யிருந்தும் சமையல் நன்றாக இருந்தது என்று தான் சொல்கிறேன்!

அதற்கு இரண்டு வருஷங்களுக்குப் பிறகு எம்.ஏ. பட்டதாரியாகி ஊருக்கு வந்த அந்த வாலிபனிடம் அவர், 'ரகுபதி, உனக்கும் விஜயாவுக்கும் ஜாதகங்கள் இல்லை. ஆகவே தெய்வ சம்மதமிருக்குமானால் உங்கள் கலியாணத்தை நடத்திவிடலாம் என்று நினைக்கிறேன். கோவிலில் பூ போட்டுப் பார்க்கிறேன். உனக்கு ஆக்ஷேபணையில்லையே!' என்று கேட்டார்.

'இல்லை' என்ற அந்த வாலிபன் மறுமொழியைக் கேட்டுக் கொண்டு தெய்வ சம்மதம் கோரினார். ஆனால் ஆண்டவனுக்கு சம்மதமில்லை. நான்கு வருஷ காலமாக தனக்கு உயிர்ப்பிச்சை அளித்த வாலிபனை அந்தப் பெண் உள்ளத்தில் வைத்துப் போற்றி வந்திருந்தாள். அவள் கட்டிய கற்பனைக் கோட்டைகள் எல்லாம் அன்று இடிந்து விழுந்தன. அவளும் அந்த வாலிபனும் முன்பு அடைந்திருந்த கஷ்டங்களை நினைத்துக் கொண்ட அவளுடைய வளர்ப்புத் தந்தை தெய்வ சம்மதத்தை மீற இஷ்டப்படவில்லை. அவர் விரும்பாத காரியத்தை அந்த வாலிபனும் அந்தப் பெண்ணும் செய்ய விரும்பவில்லை. கடமை என்ற தோணியில் வாழ்க்கைக் கடலைத் தாண்டுவதே உசிதம் என்ற அவர் சொல்லுக்குக் கட்டுப்பட்டான் அவன். அந்தப் பெண்தான்; விஜயா. அப்புறம் உள்ள வரலாறு உங்களுக்குத் தெரியாததல்ல. நான் மயக்கத்திலிருந்து விடுபட்டுக் கடமையில் இன்பம் காணும் நம்பிக்கையோடு உங்களுடன் வாழ வந்தேன். உங்களுக்கு என்னிடமிருந்த அன்பும் மதிப்பும் என்னைப் புனருத்தாரணம் செய்யும் வல்லமை பெற்றவை என்பதை உணரலானேன். என் வெற்றி நான் நெருங்கு முன்னரே என் அதிர்ஷ்டம் குறுக்கே புகுந்தது. உங்கள் மதிப்பை இழந்து விட்டேன். அனாதையான என்னை அன்புடன் தன் பெண்ணாக வளர்த்தவர் அன்று ஆஸ்பத்திரியிலிருந்து வரும்போது, 'விஜயா! எனக்குமா துரோகம் செய்தாய்!' என்று கேட்டார். அவர் மதிப்பையும் இழந்த பின் நான் இருந்துதான் என்ன பயன்! ஆனால் நான் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன். எங்கேயாவது போய் என் வாழ்நாளைக் கழிக்கப் போகிறேன். துரதிர்ஷ்டம் பிடித்த என் நிழல் இனி உங்கள்மேல் விழவே வேண்டாம் என்பதே அதற்குக் காரணம்.''

கடிதத்தைப் படித்து விட்டு நான் சிதம்பரத்திடம் கொடுத்தேன். சிதம்பரம் அதை உறையில் போட்டுவிட்டுச் சொன்னார்:

''விஜயா நான்கு வருஷங்களுக்கு முன் சென்றாள். அவள் போன பின் ஒரு வருஷ காலம் வரை எனக்கு ஒரு தகவலும் இல்லை. எனக்கு வாழ்க்கை கசப்பாகி விட்டது. என் கிராமத்தில் போய் ஒருவித லக்ஷியமுமில்லாமல் நான் வாழ்க்கை நடத்தினேன். சுமார் ஒரு வருஷத்துக்குப் பிறகு ஒரு நாள் திடீரென்று நான் முன்பு நல்லாகுளத்தில் தங்கியிருந்த பங்களாவில் புதிதாகக் குடிவந்திருந்த ஒருவரிடமிருந்து ஒரு தந்தி வந்தது. 'உன் மனைவிக்கு அபாயம்' என்று தந்தியில் கண்டிருக்கவே நான் புறப்பட்டுச் சென்றேன்.''

சிதம்பரம் மேலே பேச முடியாமல் நிறுத்திவிட்டார். சில நிமிஷங்களுக்குப் பிறகு தொடர்ந்தார்: ''கடைசியில் என் முகத்தைப் பார்த்துக் கொண்டு உயிர்விடலாம் என்று எண்ணித் நல்லாகுளத்திற்கு வந்திருக்கிறாள் விஜயா. அவள் பிரயாணம் செய்து கிராமம் வரை வர முடியாது என்று எண்ணிக்கொண்டே அந்தப் பங்களாவில் குடியிருந்தவர் அவளைத் தம் வீட்டில் தேக்கி நிறுத்தி விட்டு என் விலாசத்தை அவளிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொண்டு தந்தி யடித்திருந்தார்.

''நான் போய் பார்த்தபோது விஜயாவின் உயிர்ப் பறவை விடுபெற்றுச் சில மணி நேரம் ஆகிவிட்டது. அவள் தன் கடைசிக் காலத்தில் உற்றார் ஒருவருடைய முகத்தையும் காணக் கொடுத்து வைக்கவில்லை. முன்பின் அறிமுகம் இல்லாதவர்கள்தான் கருணை கூர்ந்து அவளுக்கு உதவினார்கள்; கண்ணீரும் விட்டார்கள்.

''பரசுராம், அன்பை வாழ்வின் நிறைச் செல்வம் என்கிறோம். காதல் சாவிற்குப் பெருமை யளிக்கிறது என்கிறோம். ஆனால் அது சிலர் அநுபவமாயிருக்கலாம். சிலருக்கு அன்பு அளிக்கும் பரிசு உள்ளேயே கனிந்து உடலையும் மனதையும் சாம்பராக்கும் தீ ஒன்றுதான். விஜயா தன் பெயரைப் பொய்யாக்கும் அளவு வாழ்வில் தோல்வியைக் கண்டாள். அதன் காரணமாகவே மறு உலகிற்கும் சென்று விட்டாள்.

விஜயாவின் கதிக்கு நான் எந்த அளவு பொறுப்பாளி என்பதை நினைத்தால் 'வாழ்க்கையை, பிரிந்த ஏடுபோல் படிக்க முயன்று தோல்வியுற்ற மூடம் நீ! உன்னால்தான் அந்தப் பெண் அழிந்தாள்!' என்று என் மனச்சாட்சி இடித்துக் காட்டுகிறது. பைத்தியம் பிடித்துவிட இருந்த என்னை இந்த அளவு உய்ப்பித்தவன் விஜயாவின் அம்மாஞ்சேய் ரகுபதி. அவன்தான் இந்த நிலயத்தை முன்பு நடத்தி வந்தான். என்னை இங்கே அழைத்து வந்து, ''பொறுப்பிலே அமைதியைக் காண முயல்வாய், சிதம்பரம்! பிறர் துயரத்தைத் தீர்க்க நம்மால் இயன்றதைச் செய்து சாந்தியைக் காண்பது நம் கடமை'' என்று சொல்லி இந்த நிலய நிர்வாகத்தை என்னிடம் விட்டுச்சென்றான் ரகுபதி.

அவன் சொன்னதைத்தான் நேற்று நான் வேறு விதமாக இந்தக் குழந்தைகளிடம் எடுத்துச் சொன்னேன்!'' என்று கூறி முடித்தார் சிதம்பரம்.



# ஆனந்த வாழ்க்கை

திருப்தி மிளிர்கிறது அவர் முகத்தில். அவள் கையால் ஆசையுடன் போட்டுக் கொடுத்த அந்த ஒரு டம்ளர் 'டீ'யைக் குடித்தார். நாள் முழுவதும் ஆபீஸில் உழைத்த அவர் களைப்பு பறந்தோடி விட்டது. உற்சாகம் அடைகிறார். இனி மனைவியுடன் சரச சல்லாபம், குழந்தைகளுடன் விளையாட்டு. ஆனந்த வாழ்க்கைக்கு வேறு என்ன வேண்டும்?

தினம் கணவன் வீடு திரும்புதலை அவள் ஆவலுடன் மட்டுமல்லது முன் யோசனையுடன் ஒரு டம்ளர் 'டீ'யுடன் எதிர்பார்க்கிறாள்.

உற்சாகமளிக்கும் 'டீ' போடுவது எவ்வளவு சுலபம்! செலவுக்கு செலவும் குறைவு; நொடிப்பொழுதிலே தயாரித்து விடலாம். நல்ல 'டீ'யை தினம் ரஸித்துக் குடியுங்கள்.

**மந்திர சக்தியுள்ள**

**'டீ'யைக் குடியுங்கள்.**



சென்ட்ரல் டீ போர்டாரால் வெளியிடப்பட்டது. C.T

# கோமதியின் சகோதரன்

**புஷ்யன்**

வாசலில் புடவைக்காரன் வந்திருந்தான். கோமதியும், அவளுடைய மதினி ரங்கநாயகியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். புடவைக்காரன் வித விதமான, கண்ணைப் பறிக்கும்படியான வர்ணங்களிலும், மாதிரிகளிலும் உள்ள எல்லாப் புடவைகளையும் வாகவமாய் விரித்துப் போட்டு அவைகளின் அழகை மேலும் அதிகமாக எடுத்துக் காட்டும்படி செய்து கொண்டிருந்தான். எல்லாப் புடவைகளுமே அவர்களுடைய கண்ணையும், மனத்தையும் கவர்ந்தன. கடைசியில் மூன்று மாங்காய்களும், இரண்டு மாவிலைகளுமாய் சரிகை பார்டர் போட்ட பச்சை வர்ணப் புடவை மிகவும் மனதுக்குப் பிடித்ததாக இருந்தது. கோமதி அதை வாங்கிக் கொள்ள ஆசைப்பட்டாள்.

"இது நன்றாயிருக்கா மன்னி!" என்று கேட்டாள்.

"ஓ! ரொம்ப நன்றாயிருக்கு! உன் சிவந்த மேனிக்கு எடுப்பாயிருக்கும்" என்றாள் ரங்கநாயகி.

கோமதி அதை எடுத்துக் கொண்டு உள்ளே போனாள். சாய்வு நாற்காலியில் கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ஜம்புநாதனிடம் "அண்ணா இந்தப் புடவையை வாங்கிக் கொள்ளட்டுமா!" என்று கேட்டாள்.

ஜம்புநாதன் புடவையை வாங்கிப் பார்த்தான். "நன்றாயிருக்கிறது, வாங்கிக் கொள்" என்றான்.

"நூற்றைம்பது ரூபாய் சொல்கிறான்" என்று விலையைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள் கோமதி.

"பரவாயில்லையே, சரஸமாகத்தான் விலை இருக்கிறது. இதையே கடையில் போய்க் கேட்டால் இருநூறு ரூபாய் சொல்வான்."

"அப்போ, பணம் தருகிறாயா!"

ஜம்பு நாதன் திடுக்கிட்டான். "பணமா!"

"என்ன அண்ணா அப்படித் தூக்கி வாரிப் போடுகிறது. ஆசையோடு கேட்கிறேன். வாங்கித் தரக் கூடாதா!" என்று கேட்டாள் கோமதி.

"அவ்வளவு பணத்துக்கு எங்கே போவேன், கோமதி" என்றான் ஜம்புநாதன்.

"நேற்று பாங்கிலிருந்து பணம் வாங்கி வந்தாயே அண்ணா. எனக்கு ஏதாவது வாங்கித் தரத்தான் வாங்கி வந்திருக்கிறாய் என்றல்லவா நினைத்தேன்" என்றாள் கோமதி.

"அந்தப் பணத்தை நினைத்துத்தான் இந்தப் பேரமா! அதை லக்ஷ்மிக்கு அனுப்புவதற்கல்லவா கொண்டு வந்தேன்! உன் பணத்தில் இந்தப் புடவையை வாங்கப் போகிறாயாக்கும் என்றல்லவா நான் நினைத்தேன்!"

ஜம்புநாதன் கூறிய இவ்வார்த்தைகளைக் கேட்டதும் கோமதிக்குக் கோபம் வந்தது. "ஆமாம், உனக்கு எப்போதும் எனக்குச் செய்ய வேண்டுமென்றால் மட்டும் கையரிப்பு. லக்ஷ்மிக்கு என்றால் உடனே வரிந்து கட்டிக்கொண்டு செய்கிறாய். நான் என்றால் உனக்கு ஆகாது" என்று குறை கூற ஆரம்பித்தாள்.

"என்ன கோமதி! இப்படி ஏதேதோ அள்ளித் தெளித்துப் பேசுகிறாயே. உனக்கும் லக்ஷ்மிக்கும் வித்தியாசமில்லையா! அவள் இருக்கும் நிலை உனக்குத் தெரியாதா! உன் சகோதரிதானே அவளும்" என்று அன்போடு சொன்னான் ஜம்புநாதன்.

"செய்ய வேண்டுமென்றால் இந்த நூற்றைம்பது ரூபாய்தானா பிரமாதம்! வாங்கித்தர இஷ்டமில்லையென்று சொல்லேன்" என்று மேலும் குற்றம் கூறிக்கொண்டே போனாள்.

"கோமதி! நீ கொஞ்சம் கூட அறியாத்தனமாகப் பேசுகிறாய்."

"ஆமாம், எனக்கு மூளையில்லைதான். நான் இங்கு வந்ததே பிசகு. நான் இன்று இரவு ரயிலிலேயே ஊருக்குப் போகிறேன்" என்று கூறிவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள்.

"என்னம்மா, புடவை வேணுமா வேண்டாமா? சொல்லுங்க சீக்கிரம். எனக்கு நாழியாகிறது" என்று கத்தினான் புடவைக்காரன்.

கோமதி வாசலில் வந்து புடவையைக் கொடுத்துவிட்டு உள்ளே போய் அவசரம் அவசரமாக மூட்டை கட்ட ஆரம்பித்தாள்.

ஜம்புநாதனும், ரங்கநாயகியும் எவ்வளவு கூறியும் கேளாமல் அன்றிரவே தனியாகப் புறப்பட்டுப் பம்பாய்க்குப் போய் விட்டாள்.

## 2

ஜம்புநாதன் ஒரு பாங்கில் அக்கௌண்டெண்டாக இருந்தான். அவனுடைய பெற்றோர்கள் அவனுக்குப் பாரமாகக் கோமதியையும், லக்ஷ்மியையும் விட்டுவிட்டு ஆறு வருஷங்களுக்குமுன் இறந்து போனார்கள். அப்போது லக்ஷ்மிக்கு வயது பதினேழு. கோமதிக்குப் பதினைந்து. இரண்டு தங்கைகளையும் நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கும் பொறுப்பு அவனுடையதாகி விட்டது. சுமாரான ரொக்கத்தையும் அவனுடைய தகப்பனார் விட்டுப் போயிருந்தார்.

லக்ஷ்மிக்கு நல்ல கணவனைத் தேடினான். எத்தனையோ பேர் வந்து பார்த்துவிட்டுப் போன பிறகு கடைசியில் திருநெல்வேலியிலிருந்து ஒரு வரனைத் தீர்மானித்தான். லக்ஷ்மியின் அழகுக்கு ஏற்றவனாகவே இருந்தான். சிவப்பாகவும் கம்பீரமாகவும் இருந்தான். அதில் மயங்கிப் பிள்ளை வீட்டார் கேட்ட சீர் வகையறாக்களைச் செய்து சிறப்பாகக் கல்யாணத்தை முடித்தான்.

லக்ஷ்மி புக்ககம் சென்றாள்.

முதலில் அவளிடமிருந்து மிகவும் உத்ஸாகமான கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. தானும், தன் கணவனும் மிகவும் அன்பான, உல்லாசமான வாழ்க்கை நடத்துவதாகவும் அவளுடைய கணவனும், மாமனார், மாமியாரும் அவளிடம் பிரியமாக இருப்பதாகவும் கடிதங்களில் எழுதி வந்தாள்.

ஒருநாள் தபால்காரன் கொண்டு வந்து கொடுத்த கடிதத்தைப் பார்த்து ஜம்புநாதன் திகைத்து விட்டான். அதில் லக்ஷ்மி தன் கணவனுக்கு ஒரு நாள் கால்களில் வலிப்பு உண்டானதாகவும் ரொம்பவும் அவஸ்தைப் பட்டதாகவும், அப்புறம் மாமனாரும் மாமியாரும் பேசிக் கொண்டதில் 'அவரு'க்கு அடிக்கடி அந்த வலிப்பு 'வருவதுண்டென்று தெரிகிறதாகவும் எழுதியிருந்தாள். இதைப் படித்த ஜம்புநாதனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. தான் சரியாக விசாரிக்காமல் லக்ஷ்மிக்குத் தீங்கிழைத்து விட்டதாக எண்ணித் துக்கப்பட்டான்.

ஆனால் மூன்று மாதங்கள் கழித்து வந்த ஒரு கடிதத்தைக் கண்டதும் அவனுக்கு உலகமே சுழல்வதாகப்பட்டது. அடிக்கடி வரும் அந்த வலிப்பு பத்து நாட்களுக்கு முன்பும் வந்தது. இன்னும் அப்படியே இருந்து வருகிறது. டாக்டர்கள் வந்து பார்த்து அந்தக் கால் இனி சுவாதீனமற்று விட்டதாகக் கூறிவிட்டார்கள் என்று எழுதியிருந்ததைப் படித்த ஜம்புநாதன் பதறிவிட்டான். அன்றிரவே புறப்பட்டு தன் அருமைத் தங்கை லக்ஷ்மியையும் அவளுடைய கணவனையும் பார்த்துவிட்டு வரப்போனான்.

அங்கு அவன் கண்ட காட்சி அவனை மிகவும் உருக்கமடையச் செய்து விட்டது. அவளுடைய கணவன் தியாகு கட்டிலில் படுத்திருந்தான். அவனுடைய கால் இருந்தது. ஆனால் அவனால் அப்புறம், இப்புறம் அசைக்கவே முடியாது. சரியாக உட்காரக் கூட முடியாது. சுவரில் சாய்ந்து கொண்டுதான் உட்கார வேண்டும். லக்ஷ்மி அவனருகில் உட்கார்ந்து கவலையே உருவாய், சோகத்தின் பிம்பமாய் அவனுக்குச் சிசுருஷைகள் செய்து கொண்டிருந்தாள். ஜம்புநாதனைப் பார்த்த மாத்திரத்தில் 'அண்ணா!' என்று வீரிட்டலறிக் கட்டிக் கொண்டாள். இந்தச் சமயத்தில் ஜம்புநாதனுடைய உள்ளத்தில் கொதிப்பு ஏற்பட்டது.

"லக்ஷ்மி, நம்மை ஏமாற்றி விட்ட இவர்களை சும்மா விடப் போவதில்லை" என்று கூவினான்.

லக்ஷ்மி அண்ணன் வாயைத் தன் கையால் மூடி, "இது என் விதி. யாரை நொந்து என்ன பயன்! என் பாக்கியம் இனி கிடைக்குமா! அவர் என் கணவர். அவருக்குப் பணிவிடை செய்வதே என் லட்சியம்" என்று சமாதானம் செய்தாள்.

அவளுடைய பேச்சைக் கேட்டு ஜம்புநாதன் மௌனமானான். அவளுடைய நிலைமையைக் கண்டு வருந்தினான். சில நாள் தன்னிடம் வந்திருந்து விட்டுப் போகும்படி கெஞ்சினான். ஆனால் லக்ஷ்மியோ அண்ணா 'இவர்' நல்ல நிலைமையில் இருக்கும்போது என்னை எத்தனை நாட்கள் வந்திருக்கும்படி கூப்பிட்டிருந்தாலும் நான் வந்திருப்பேன். ஆனால் இனி அவரை விட்டு ஒரு கணமும் என்னால் பிரிந்திருக்க முடியாது" என்றாள்.

ஜம்புநாதன் அவளுக்குத் தேறுதல் கூறிவிட்டு மிகவும் மன வருத்தத்துடன் ஊர் திரும்பினான்.

## 3

கோமதிக்கு வரன் தேடினான். ஜம்புநாதன் நன்றாகத் தீர விசாரித்து லக்ஷ்மிக்குச் செய்தது போல் அவசரப்பட்டுச் செய்யாமல் ஒரு சிறந்த வரனைத் தீர்மானித்தான்.

கோமதிக்குச் சாதாரணமாகவே லக்ஷ்மியிடம் அவளையும் அறியாமல் ஒரு அசூயை. அவளிடம் ஜம்புநாதனுக்கு எப்போதும் ஒருபடி அதிகமான அன்பு என்று அவளுடைய அபிப்பிராயம். கோமதியின் விவாகத்திற்குக்கூட லக்ஷ்மி வரவில்லை. ஒருநாள்கூட அவள் தன் கணவனை விட்டு வரச் சம்மதிக்கவில்லை. ஆனால் கோமதிக்கு அழகிய பட்டுப் புடவை ஒன்றை வாங்கிப் பரிசாக அனுப்பியிருந்தாள். பரிசை ஏற்றுக் கொண்டாலும் அவள் தன் கல்யாணத்திற்கு வரவில்லையே என்று கோமதிக்கு அவள்மீது கோபம்தான்.

லக்ஷ்மிக்குத் தன் தங்கை கலியாணத்துக்குப் போக வேண்டும் என்று பிரியம்தான். ஆனால் அவளுடைய மாமனாரும் படுத்த படுக்கையாகக் கிடந்தார். அவருக்கு அருகிலேயே இருக்கவேண்டியதாகிவிட்டது. டாக்டர் சொல்லுவதைப் புரிந்து கொண்டு மருந்து கொடுக்க லக்ஷ்மியைத் தவிர வேறு ஆளில்லை. என்ன செய்வாள் பாவம்!

லக்ஷ்மிக்கு அவளுடைய கணவனின் சக்தியற்ற நிலையுடன் மட்டும் துரதிர்ஷ்டம் நின்றுவிடவில்லை. கோமதியின் விவாகம் ஆனபிறகு சில நாளைக்கெல்லாம் லக்ஷ்மியின் நோய்வாய்ப்பட்டிருந்த மாமனாரும், மாமியாரும் ஒருவர் பின் ஒருவராக இறந்து போயினர். அவள் தன்னந் தனியாக, நிர்க்கதியாக விடப்பட்டாள். மாமனார் இருந்த



வரை சம்பாத்தியம். சாப்பாட்டைப் பற்றி அவ்வளவாகக் கவலைப் படாமலே இருந்தார்கள் எல்லோரும். அவருக்கு வந்த பென்ஷனில் காலம் கழித்து வந்தார்கள்.

இனிமேல் சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்று கவலைப்பட்டாள் லக்ஷ்மி. ஜம்புநாதன் அவர்கள் இருவரையும் தன்னிடம் வந்திருக்கும்படி கூறியும் அவள் வர மறுத்து விட்டாள். அவள் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்திருந்தாள். அதைக் கொண்டு அவ்வூரிலேயே ஒரு பெண் பாடசாலையில் உபாத்யாயினியாய் அமர்ந்தாள். அவளுடைய கணவனுக்குச் சிசுருஷைகள் செய்து கொண்டும் பள்ளிக்கூடத்து வேலைகளை கவனித்துக் கொண்டும் காலம் கடத்தி வந்தாள்.

ஜம்புநாதன் அடிக்கடி லக்ஷ்மியைப் போய்ப் பார்த்து வருவான். அவளுக்குப் பண உதவியும் செய்து வந்தான். அதை மட்டும் லக்ஷ்மி மறுக்கவில்லை. முழுதும் ஜம்புநாதன் மேலேயே பாரமாக இருக்கக் கூடாதென்பதே அவளுடைய கொள்கை. லக்ஷ்மியே கூட சில சமயங்களில் பணம் கேட்டெழுதுவாள். ஜம்புநாதன் அவளுக்காகவே சிக்கனமாகச் செலவு செய்து பணம் சேர்த்து அவள் கேட்ட பொழுதெல்லாம் அனுப்பி வந்தான். அவன் கருத்துக்கேற்ற படியே ஜம்புநாதனுடைய மனைவி ரங்கநாயகியும் அமைந்தாள்.

கோமதி நல்ல அந்தஸ்திலிருந்த கணவனை அடைந்திருந்தாள். அவளுக்கு ஒரு வித குறைவும் இல்லை. அவளுடைய கணவன் அவள் மேல் தன் அன்பையெல்லாம் சொரிந்தான். கோமதி தன் அண்ணனைப் பார்க்க வரும்போதெல்லாம் தன் கணவன் தன்னிடம் கொண்டுள்ள பிரேமையைப் பற்றி எல்லாம் கூறுவாள்.

"என்னமோ அம்மா கோமதி, நீயாவது சௌக்கியமாயிருப்பது கேட்டு என் மனதுக்குச் சந்தோஷமாயிருக்கிறது" என்பான் ஜம்புநாதன்.

கோமதிக்கு மட்டும் ஒரே ஒரு மனக்குறை. இது வரை கல்யாணமான பிறகு ஐந்தாறு தடவைகளுக்கு மேல் தன் அண்ணனுடைய வீட்டுக்கு வந்திருக்கிறாள். ஆனால் ஒரு தடவையாவது ஜம்புநாதன் அவளுக்கு ஒன்றும் ஆசையாக வாங்கித் தந்ததில்லை. கடமை என்ற ஹோதாவில் கல்யாணத்தின்போது 'சீர்'க்கச் செய்ததுடன் சரி.

இது கோமதிக்கு ரொம்பவும் ஏமாற்றமாக இருந்தது. அவளுடைய கணவன் எவ்வளவோ அவளுக்குச் செய்திருக்கிறான். கணக்கெடுக்க முடியாமல் புடவைகள் பீரோவில் இருக்கின்றன. இருந்தாலும் தமையனார் வாங்கிக் கொடுத்தது என்று பெருமைப்பட முடியவில்லையே என்று அவளுக்குப் பெருங் குறையாக இருந்தது.

கோமதி படித்து உலகம் தெரிந்த பெண்ணாயிருந்தாலும் அவளும் பெண்தானே! பெண்களுக்கு உள்ள இயற்கையான குணம் போகுமா! அவளால் ஜகந்நாதனின் நிலைமை உணர்ந்து கொள்ள முடியவில்லை. அவன் ஏதோ தன்மீது அன்பு காட்டவில்லை என்றே நினைத்தாள்.

அத்துடன் ஜம்புநாதன் பணம் எல்லாம் சேர்த்துச் சேர்த்து எப்போதும் லக்ஷ்மிக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்ததும் அவளுக்கு இருந்த ஏமாற்றம், குறை எல்லாம் கோபம், அசூயையாக மாறியது. அதனால் இத் தடவை தமையன் வீட்டுக்குப் போனால் ஒரு பட்டுப் புடவையுடனாவது திரும்பி வரவேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டு வந்திருந்தாள். ஆனால் இத் தடவையும் ஜம்புநாதன் அவள் வாய் திறந்து கேட்டும் வாங்கித்தராமல் இருந்ததோடல்லாமல் பணத்தை லக்ஷ்மிக்கு அனுப்ப வேண்டும் என்று அவள் எதிரிலேயே கூறியது அவளுக்கு மேலும் ஆத்திரத்தை மூட்டியது. அதனால் அவள் கோபித்துக்கொண்டு தன் கணவனிடம் போய் விட்டாள்.

## 4

கோமதியின் கணவன் சீனிவாஸன், "என்ன கோமதி, இவ்வளவு சீக்கிரம் லெட்டர் கூடப் போடாமல் வந்து விட்டாயே! உங்க அண்ணா வீட்டில் இந்தத் தடவை ஒரு மாதம் தங்கப்போவதாகச் சொன்னாயே!" என்று கேட்டான்.

"என்னமோ, அங்கே சதா உங்கள் ஞாபகமாகவே இருந்தது. திடீரென்று நினைத்துக் கொண்டு வந்து விட்டேன்" என்று சமத்காரமாய்ப் பதில் கூறினாள். அண்ணனிடம் கோபித்துக் கொண்டு வந்ததை மறைத்து விட்டாள். என்ன இருந்தாலும் பெண் அல்லவா! தன் பிறந்தகத்து பெருமையைப் பற்றிக் குறைவாகச் சொல்ல இஷ்டப்படுவாளா!

* * *

சில மாதங்கள் கழிந்தன.

ஒரு நாள் கோமதியின் கணவன் சீனிவாஸன், "கோமதி, நாளைக் காலை எக்ஸ்பிரஸுக்குப் புறப்படத் தயாராயிரு. ஆபீஸ் விஷயமாகச் சென்னையில் ஒரு மாதம் தங்க வேண்டும்" என்றான்.

"என்ன, சென்னைக்கா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"ஆமாம், உன் பாடு குஷிதானே! ஜம்மென்று பிறந்தக வாசம்......"

"உம்ம்...நானும் வர வேண்டுமா. என்ன! அனாவசியமாய் இப்போதெதற்கு வண்டிச் செலவு செய்து கொண்டு" என்றாள் கோமதி.

"அட என்ன இப்படிப் பேசுகிறாய்! நீ தனியாக இங்கிருக்க முடியுமா என்ன! என்னை விட்டுப் பிரிந்திருக்க மனமில்லாமல் பிறந்தகத்திலிருந்தே சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்தவளா இப்போது தனியாக பம்பாயில் இருக்கிறேன் என்கிறாய்! உம், மூட்டையெல்லாம் கட்டிக் கொள்" என்று கூறிவிட்டான் சீனிவாஸன்.

அதற்கு மேல் வார்த்தை வளர்த்தப் பிரியப்படாமல் ஊருக்குப் புறப்பட ஆயத்தமானாள்.

* * *

சென்னைக்கு வந்த புதிதில் மனஸ்தாபத்தை மறைத்து விட்டுச் சகஜமாக அண்ணனுடனும், மதினியுடனும் பழகி வந்தாள். கொஞ்சம், கொஞ்சமாகப் பழையபடி மனத்தில் பழைய குறைகள் வேர் விட்டுக் கிளம்ப ஆரம்பித்தன.

ஒரு நாள் சீனிவாஸன் ஆபீஸிலிருந்து திரும்பி வந்தவன் 'தலைவலி' என்றான். அப்புறம் அது மெள்ளப் பெருகிப் பெருஞ் சுரமாக மாறிவிட்டது. டாக்டர் வந்து விலையுயர்ந்த மருந்துகள் எல்லாம் வாங்கித் தரும்படி கூறிவிட்டுத் தினத்துக்கு மூன்று நான்கு இஞ்செக்ஷன் செய்து விட்டுப் போனார். கோமதி கவலையே உருவாகக் காட்சியளித்தாள். நாளுக்கு நாள் சீனிவாஸனின் உடல் இளைத்துக் கொண்டு வருவதைப் பார்த்து அவள் இரவும் பகலும் அழுத கண்ணுடன் விளங்கினாள். டாக்டர் 'பில்'லோ விஷம் போல் ஏறிக் கொண்டு வந்தது.



இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள் விவசாயிகளின் சௌகரியத்தை உத்தேசித்து பூபதி ராஜு கோஆபரேடிவ் க்ரெடிட் பாங்க் ஒன்றை ஸ்தாபித்தார். அந்தப் பாங்கியின் தான்ய கிடங்குக்குச் சென்ற 16—12—51ல் கனம் குமாரசாமி ராஜா அவர்கள் அஸ்திவாரக்கல் நாட்டினார்.

அன்று கோமதி ஜம்புநாதனுடைய அறைக்குப் போனாள். அவளுடைய கண்களில் அங்கு மேஜை மேல் இருந்த கடிதம் ஒன்று தென்பட்டது.

அன்புள்ள லக்ஷ்மிக்கு,

உன் கடிதம் கிடைத்தது. இதுவரை என்றைக்குமே உன் பணக் கஷ்டத்தைத் தீர்ப்பதில் நான் தயங்கியதில்லை. நீ என் அறியாமையால் தினமும் கஷ்டப்பட்டு வாழ்க்கை நடத்துவதை நான் மறப்பதில்லை. அதனால் தான் நான் செட்டும் கட்டுமாய்ச் செலவு செய்து மிச்சம் பிடித்து நீ எப்போது கேட்டாலும் பண உதவி செய்து வந்தேன். நானே கூட வலுவில் அனுப்பியிருக்கிறேன். இதன் காரணமாக நான் கோமதியின் வெறுப்புக்குக் கூட பாத்திரமாயிருக்கிறேன். என் கொள்கை, பணத்தின் தேவை யாருக்கு மிகவும் அவசியமாக இருக்கிறதோ அவர்களுக்கு உதவுவது என்பதுதான். கோமதி வெறும் புடவையும், நகையும் கேட்டாள். உங்கள் இருவர் நிலையில் உனக்குத்தான் பணத்தின் தேவை அவசியம். அவளுக்கு வாங்கித் தரும் ஆடம்பரங்களின் பணத்தில் உன் அவசிய தேவைகளை எவ்வளவோ தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் கோமதிக்குப் புரியவில்லை. நான் என்ன செய்யட்டும்? இப்போது விஷயத்துக்கு வருகிறேன். அப்போது இந்தப் பூர்வ பீடிகையின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்வாய். நீ கேட்டுக் கொண்டபடி இந்தத் தடவை பணம் அனுப்ப முடியாமலிருப்பதற்கு மிகவும் வருந்துகிறேன். உன் தேவை அவசியமானது என்று தெரியும். ஆனால் அதைவிடப் பிரதானமான செலவு ஒன்று இங்கு ஏற்பட்டிருக்கிறது. கோமதியின் கணவர் படுத்த படுக்கையாக இருக்கிறார். அதன் காரணமாக மருந்துச் செலவு ஏகமாக ஆவதால் நான் இப்போது உனக்குப் பணம் அனுப்புவதற்கில்லை. சீக்கிரம் மாப்பிள்ளைக்கு உடம்பு சரியாகிவிடும். பிறகு உனக்கு அனுப்புகிறேன். நீயும் கோமதியைப் போல் என் மேல் கோபித்துக்கொள்ளமாட்டாய் என்று நினைக்கிறேன்.

ஜம்புநாதன்

அவள் அக்கடிதத்தைப் படித்ததும் ஜம்புநாதனுடைய உண்மை உள்ளத்தை உணர்ந்து கொண்டாள். அவன் பேரில் போய்க் கோபப்பட்டோமே என்று வருத்தப்பட்டாள். அந்தக் கடிதத்தைப் மடித்து மறுபடியும் கவரில் போட்டுவிட்டுத் திரும்பிய பொழுது ஜம்புநாதன் நிற்பதைப் பார்த்தாள்.

"அண்ணா! நான் தெரியாமல், உன் மீதும் லக்ஷ்மியின் பேரிலும் கோபம் கொண்டேன். என்னை மன்னித்து விடு" என்று கூறி அவனுடைய காலில் விழுந்தாள்.

கோமதியின் செயலைப் பார்த்த ஜம்புநாதனுக்கு மனதை என்னவோ செய்தது. அவளை அப்படியே வாரி எடுத்தான்.

"அடி அசடே! நீ என்ன செய்து விட்டாய் உன்னை மன்னிப்பதற்கு. நீயும் என் அருமைத் தங்கைதானே" என்றான்.

"அண்ணா! அக்காள் லக்ஷ்மிக்கே பணத்தை அனுப்பி வையேன். டாக்டருக்கு வேண்டிய பணத்தை அவர் கொடுப்பார்" என்றாள்.

"இல்லை கோமதி. நம் வீட்டுக்கு வந்த மாப்பிள்ளையின் உடம்பைப் பத்திரமாகக் காப்பாற்றி அனுப்புவது என் பொறுப்பு. லக்ஷ்மிக்குப் பிறகு அனுப்பலாம்" என்றான் ஜம்புநாதன்.

"அண்ணா! நான் உன்னைச் சாதாரணமாக எண்ணிக் கொண்டு விட்டேன். ஆகா! பணம் உள்ளவர்களின் மனம் எல்லாம் உன்னுடையதைப் போலவே இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்" என்றாள் கோமதி.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## இரண்டாம் பாகம்

### 1. அதிசய மூளைப் பொறி

உடலுக்குச் சிரசே பிரதானம். ஆசனங்களில் சிரசாசனம்தான் பிரதானமானது. சிரசைப் பிரதானமாகக் கொள்ளக் கூடிய காரணங்கள் பல இருந்தாலும், அவைகளெல்லாவற்றைக் காட்டிலும் மூளை பாகத்திற்குப் பிரதானம் அளிப்பதைத்தான் அது குறிக்கும். சிலர் கண்தான் பிரதானமானது எனலாம். சிலர் மூக்குத்தான் முக்கியம் எனலாம். சிலர் புருவம்தான் முக்கியமெனலாம். இன்னும் சிலர் பல், உதடு, மூக வாய்க்கட்டை முதலியவைகள்தான் உயர்ந்தது என்று சொல்லலாம். ஆயினும் இவைகள் எல்லாமே ஒருவருக்கு அழகுடையதாயும் அமைப்பாயும் இருந்து விட்டு, மூளை மட்டும் சரியாய் அமையவில்லை என்றால் யாது பயன்! மனிதன் மனிதனாக இருந்தும், மனிதனுக்குரிய குணங்கள் அவனிடம் காண முடியாது. ஆகவே இவைகளெல்லா வற்றிற்கும் மூளையே மிகவும் பிரதானமென்று ஏற்படுகிறதல்லவா!

மூக்கு சப்பையாகவும் இருக்கலாம், நீண்டுமிருக்கலாம். உதடுகள் பெருத்தும் இருக்கலாம், சிறுத்து மிருக்கலாம். பல் இல்லாத பொக்கை வாயாகவு மிருக்கலாம், பல் மேடாயும் இருக்கலாம். கண் சிறுத்து மிருக்கலாம், பெருத்தும் இருக்கலாம். எப்படி யிருந்தாலும் மூளை எனும் பகுதி தன் சொரூபத்தை, தன் இயற்கை நிலையை, தன் அறிவுத் திறனை, தன் உறுதிப்பாட்டை, தன் ஆரோக்கிய நிலையை இந்த அவயவங்களில் தன் தன்மையைச் சித்தரித்து விடுகிறது. ரேகைகள் பதிந்து விடுகிறது. இதனால்தான் ஒருவரைக் கண்டதும் அவர் முகம் பார்த்து அவருடைய நிலையை நிர்ணயிக்க முடிகிறது.

நல்ல நடத்தை, புத்திசாலித்தனம், திறமை, உறுதிப்பாடு, அறிவு போன்ற பல குணங்களை அவரவர்களின் முகத்தில் கோடிட்டு மூளையானது வரைந்து விடுவதைப் போல, கொடுமை, அசட்டுத்தனம், சோம்பல், அறிவீனம், கர்வம் போன்ற பல குணங்களையும் முகத்தில் மூளையானது பதித்து விடுகிறது. அவ்வளவு சக்தி மூளைக்கு இருக்கிறது. முகப் பூச்சுகளினாலும், முடி அலங்காரத்தினாலும், உதட்டுச் சாயங்களினாலும், உடை அலங்காரங்களினாலும், அணி ஆபரணங்களாலும் உண்மை நிலையை மறைக்க முடியாது. நாடக சினிமாக்களில் தூரத்தில் பார்த்து நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளலாம். மூளையின் சக்தி ஒரு காந்த சக்தியைப் போன்றது. யாருக்கு இந்த சக்தி அதிக மிருக்கிறதோ அவர்கள்தான் வசீகர புருஷராக இருக்க முடியும். மகாத்மா காந்தி அவர்களின் ஒவ்வொரு அவயத்தையும் நாம் தனித்தனியாகப் பிரித்து, சாமுத்திரிகா லக்ஷணப்படி எல்லாம் சரியாய் இருக்கின்றதா என்று பார்த்தால் இதில் ஒன்றிரண்டு தேறுவதுகூட கஷ்டம். ஆனாலும். அவர் முகத்தைப் பார்த்தவுடன், நமக்கு ஒரு அமைதி, அடக்கம், அன்பு, அபிமானம், ஆர்வம், மரியாதை, கடமை உணர்ச்சி போன்ற பல நல்ல குணங்கள் எல்லாம் எங்கிருந்தோ உண்டாகிறது. காரணம் அக்குணங்கள் அத்தனையும் அவருடைய மூளையில் பண்பட்டு அதை முகத்திலுள்ள அவயவங்களின் மூலம் மின்சாரம் வெளிப்படுவதைப் போல் வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. அவருடைய பொக்கை வாய்ச் சிரிப்புக்கு மோகனப் புன்னகைக்கு அடிமை ஆகாதவர் யார்!

இதைப்போல எல்லாத் தேசங்களிலும் அந்தந்த பரம்பரைக்குத் தகுந்த தோற்ற முடையவர்களிடத்திலும் பல ஞானிகள், மேதைகள், வீரர்கள் தோன்றுகிறார்கள்.

அதனால்தான் பொய்யாமொழிப் புலவரான திருவள்ளுவரும்,

> “உருவுகண்டு எள்ளாமை வேண்டும்: உருள் பெருந்தேர்க்கு
> அச்சாணி அன்னார் உடைத்து”

என்று அறுதியிட்டுக் கூறியிருக்கிறார்.

அவ்வளவு பிரதானமான மூளை மனிதப் பிறவிக்கே உரித்தாய் இருக்கிறது. சிருஷ்டி ஜாலங்களில் ஒவ்வொரு ஜீவராசிகளின் மூளையும் வெகு விநோதமாய் அமைந்திருக்கிறது. சிருஷ்டியில் உயர்ந்த மனிதனின் மூளையைப் போல அவ்வளவு அபிவிர்த்தியை எந்த ஜீவராசிகளிடத்தும் பார்க்க முடியாது. ஆனால் சில சக்திகள் சிலவற்றிற்கு மனிதனைவிட அதிகமாகவும் இருக்கலாம். ஆனால் மனித மூளையைப் போல விஷயங்களைக் கிரகித்து அறிந்து, ஆராய்ந்து அதைச் செயல் ஆற்றும் திறனைப் போல வேறு எந்த உயிர்களின் மூளைக்கும் கிடையாது. ஆறறிவு மனிதனுக்குத்தான் உரியது. அதை அவன் உபயோகிப்பதில்தான், மனிதன் மனிதனாக வாழ்வதும் மனிதன் தெய்வமாக வாழ்வதும் அமைந்திருக்கிறது.



“அப்பா! நீ ‘அடிக்கடி வந்து கழுத்தை அறுக்கிறான்’ என்பாயே! அந்த மாமா வந்திருக்கிறார்!”

மூளை ஒரு சதைப் பிண்டம். அது பத்திரமாய்ப் பெட்டிக்குள் இருப்பது போன்று, நமது மண்டை ஓட்டினுள் நன்கு மூடப்பட்டு வெகு பத்திரமான இடத்தில் இருக்கிறது. மூளையில் பல பாகங்கள் உண்டு. முன் மூளை, மத்தி மூளை, பின் மூளை என்றிருக்கிறது. இவைகளில் குறுக்கும் நெடுக்குமாக எண்ணிறந்த ரத்த நாடிகள் பின்னிப் பிணைந்தோடிக் கிடக்கின்றன. சரீரத்திலுள்ள சகல அவயவங்களுக்கும் சகல பாகங்களுக்கும் மூளைக்கும் தொடர்புண்டு. மூளைக்குத் தொடர்பில்லாத அவயவமோ, பாகமோ உடலில் இருக்க முடியாது. அந்தந்த அவயவங்களுக்கும், பாகங்களுக்கும் மூளையில் அதற்காக இடம் ஒதுக்கப்பட்டிருக்கின்றது. வலது பக்க அவயவங்களுக்காக இடது பக்கத்திலும், இடது பக்க அவயவங்களுக்காக வலது பக்கத்திலும் மூளையில் அறைகள் இருக்கின்றன. இவைகளல்லாது உள் வயிற்று அவயவங்களுக்காகவும் தனியே இருக்கின்றன.

உணர்விற்கு இருப்பிடம் மூளை. மூளைதான் ஒரு மனிதனை ஆட்டி வைக்கும் சக்தியின் இருப்பிடம். மூளையிலிருந்து இந்த உணர்ச்சி நரம்புகள் அந்தந்த பாகங்களிலிருந்து புறப்பட்டு முதுகுத் தண்டில் சேர்ந்து பிறகு உடல் பூராவும் பிரிகிறது. முகத்திலுள்ள அவயவங்களுக்கு வெகு சமீபத்திலேயே அவை இருக்கின்றன. ஒரு சிறு தூசி அல்லது கொசு கண்ணுக்குச் சமீபத்தில் வந்ததும் நாம் உடனே கண்ணை மூடிக் கொள்ளுகிறோம். ஒரு சிறு எறும்பு உடலில் கடித்தால் உடனே தள்ளி விடுகிறோம். நன்கு யோசித்தால் நாம் இதைத் தடுக்க வேண்டுமென்று நினைத்துப் பிறகு நாம் அதைத் தடுப்பதில்லை. ஆனால் அப்படி நினைத்த பிறகுதான் நாம் தடுக்கிறோம். வெகு விரைவில் இக்காரியம் நடந்து விடுவதால் நாம் உணர்வதில்லை. ஒரு கணத்தில் தனக்கு ஏதோ அபாயம் வருகிறது என்று கண்ணிமையிலுள்ள உணர்வு நரம்புகள் மூளைக்கு அறிவிக்கிறது. உடனே கண்ணை மூடும்படி மூளையிலிருந்து உத்தரவு வருகிறது. இமை மூடிக் கொள்ளுகிறது. எறும்பு கடித்ததை உணர்த்துவதும் அந்த நரம்புணர்ச்சிதான். அதை உடனே தள்ளவோ, அடிக்கவோ செய்வதும் அந்த நரம்புணர்ச்சிதான். ஒரு இடத்தில் அடிபட்டால் அறிவதும் இந்த நரம்புணர்ச்சிதான். நோகிறது என்று அறிவதும் நோயை அனுபவிப்பதும் இந்த நரம்புணர்ச்சிதான். அதற்காகப் பரிகாரம் தேடுவதும் இந்த நரம்புணர்ச்சிக்கு இருப்பிடமான மூளையே.

நாம் பார்ப்பவையெல்லாம் புகைப்படம் போல மூளையில் பதிவாகி விடுகிறது. கேட்பவையெல்லாம் கிராமபோன் ரிகார்டைப் போல் பதிந்து விடுகிறது. இவைகளையெல்லாம் அடிக்கடி நினைத்துப் பார்த்துப் பார்த்துப் பழகிக் கொண்டிருந்தால் அப்படியே புதிதாய் இருக்கும். இவைகளை நினைக்காமலும், எண்ணிப் பார்க்காமலும் இருந்தால் அவை சிறுகச் சிறுக மங்கி மறைந்துவிடும். இதற்குத்தான் ஞாபகசக்தி என்பது. நினைப்பது, எண்ணுவது என்பது மூளையின் அப்பகுதிக்கு ரத்தம் பாய்ச்சுவது என்றுதான் பொருள். நாம் நினைத்த மாத்திரத்தில், நினைத்த இடத்திற்கு ரத்தம் பாய்வது என்பது இயற்கை நியதி. மூளைக்குச் சாதாரணமாய் ஓர் அளவுக்கு ரத்தம் சென்று கொண்டிருந்தாலும் இந்த இயற்கை நியதியினால், நினைத்தவுடன் விஷயமுள்ள இடத்திற்கு இரத்தம் அதிகம் பாய்கிறது. மோதுகிறது, ஊடுருவுகிறது. உடனே நமக்கு அந்தப் பழைய நினைவு புகைப்படலம் விலகினாற் போல் மெல்ல நினைவுக்கு வருகிறது. எவ்வளவுக்கு எவ்வளவு நாம் மூளையில் ரத்தத்தைக் கொண்டு செல்லுகிறோமோ அவ்வளவு தெளிவு ஏற்படுகிறது. ஆகவே மூளைப் போஷணைக்கு, நல்ல ஞாபக சக்திக்கு, மற்ற அவயவங்களை அடக்கி ஆளும் திறமைக்கு, ரத்தம் மிகவும் அவசியம். அந்தக் காரியத்துக்குத் துணைபுரிவதுதான் சிரசாசனம். சிரசாசனம் செய்வதன் மூலம் மூளைக்கு நல்ல இரத்தம் தாராளமாகக் கிடைக்கிறது. சிரசாசனத்தின் மூலம் மூளையானது எப்பொழுதும், எந்த வயதிலும், இளமையாகவும் பலம் பொருந்தியதாகவும், ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது.

ஆகவே நாம் எல்லாரும் நோய் நொடி இன்றி, நூறு வயது சந்தோஷமாக இருக்க வேண்டுமானால் கட்டாயம் ஆசனப் பயிற்சியை மேற்கொண்டால்தான் நல்லது. ஒவ்வொரு கட்டுரையிலும் ஆசனப் பயிற்சியைப் பழக வேண்டும் என்று நான் அழுத்திச் சொல்லி வருவதின் காரணம் நம் எல்லோரிடமும் இயற்கையிலேயே இருக்கும் சோம்பல் குணத்தை நினைத்துத்தான். ஆசனத்தில் இவ்வளவு சௌகர்யங்கள் இருப்பதைத் தெரிந்தும் சிலர் அதற்காக தினம் ஒரு மணி நேரத்தை ஒதுக்குவதற்கு யோசிப்பார்கள். ஆனால் அவர்களே அனாவசியமாக பல மணி நேரங்களை வீணாக்குவார்கள். சகோதரர்களே! நோயற்ற வாழ்வுதான் குறைவற்ற வாழ்வு. இதுவரையில் ஆசனம் பழகாதவர்கள் இன்றே ஆசனப் பயிற்சியைத் தொடங்க ஆரம்பியுங்கள். (தொடரும்)



● கோயமுத்தூர் ஜில்லாவின் பிரபல நாதஸ்வர வித்வான்கள் பேரூர் சகோதரர்களில் ஸ்ரீ மருதமுத்து அவர்கள் சென்ற நவம்பர் 30-ம் தேதி யன்று அகால மரண மடைந்தார். பிரபல நாதஸ்வர வித்வான் பேரம்பலூர் ஸ்ரீ அங்கப்ப பிள்ளையவர்களிடம் குருகுலவாஸமிருந்து தாம் கற்ற நாதஸ்வர வித்தையைக் கர்னாடக சங்கீதத்துக்கான தனி சம்பிரதாயப்படி கையாண்டு வந்தார். அவரது புகழ் பரவி நிற்கும் இந்த ஜில்லாவிலும், இதர ஜில்லாக்களிலுமுள்ள அன்னாரது நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் ஸ்ரீ மருதமுத்து அவர்களின் மறைவு மகத்தானதொரு நஷ்டம் என்பதில் சந்தேகம் இல்லை.

# சொந்த வீடு

வி. எஸ். ஆர்.

“ஐயா தபால்!” என்று கூவினான் வாசலில் நின்ற தபால்காரன்.

காப்பியைக் கையில் ஏந்தி அன்ன நடை நடந்து வந்த சுசீலா டம்ளரை ‘டக்’ என்று மூக்காலியில் வைத்துவிட்டு மின்னலைப் போல் வாசலுக்குப் பாய்ந்து சென்றாள். தபாலை வாங்கிக்கொண்டு கவரின் மேலிருந்த கையெழுத்தைப் பார்த்தாள். அவள் உற்சாகம் பரபரப்பு எல்லாம் அடங்கி ஒடுங்கிப் போய்விட்டது. மெதுவாக அடிமேல் அடி எடுத்து வைத்துத் திரும்பி வந்தாள்.

காப்பியைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த நடேசன் “நீ போன வேகம் என்ன, திரும்பிவரும் நிதானமென்ன! உன் அம்மாளிடமிருந்து தபால் வந்திருக்கிறதாக்கும் என்று ஓடினாய்! அது என் தாயாரிடமிருந்து வந்திருக்கும் கடிதந்தானே! கொண்டா இப்படி” என்று கையை நீட்டினான். “உங்கள் தாயாரிடமிருந்து இல்லை. உங்கள் சாக்ஷாத் அக்காளிடமிருந்து வந்திருக்கிறது” என்று கூறிக் கடிதத்தைக் கொடுத்தாள்.

நடேசன் ஒரு நொடியில் அக்கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டான். “ஒரு சந்தோஷ சமாசாரம், சுசீலா! உன் நாத்தனார் நாளை ரயிலில் வரப்போகிறாளாம். வந்து உன்னோடு ஒரு மாதம் இருக்கப்போவதாக எழுதி இருக்கிறாள்.”

“ஐயோ!” என்ற வார்த்தை அவளையும் அறியாமல் வெளியே வந்தது. சட்டென்று சமாளித்துக்கொண்டு “ஒரு மாதம் தானா இருக்கப் போகிறார்! சங்கராந்தி வரையில் இருந்துவிட்டுப் பட்டணத்துக்குப் போகிறதுதானே” என்றாள்.

“சங்கராந்தி என்ன! சித்ரா பௌர்ணமி உத்சவத்திற்கும் இருந்து விட்டுப் போகச் சொல்லலாம் என்று நினைக்கிறேன்” என்றான் நடேசன் கடைக் கண்ணால் தன் மனைவியைப் பார்த்த வண்ணம்.

சுசீலாவின் முகம் அவதிப் பட்டதைப் பார்த்து அவனுக்கு ஏற்பட்ட சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். சுசீலாவின் முகம் ‘குப்’ என்று சிவந்து விட்டது. “அக்கா இங்கேயே இருந்தாலும் எனக்குச் சம்மதம்தான்” என்று சொல்லிவிட்டு டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டு ‘விர்’ என்று உள்ளே சென்றாள்.

நடேசன் அவள் நடையைப் பார்த்தவாறு மெய் மறந்து உட்கார்ந்திருந்தான்.

சுசீலா கோபித்துக்கொண்டு வேகமாக நடக்கும்போது அவள் நடையின் அழகே அலாதிதான்.

★

நடேசன் மருதூர் கிராமத்தின் பெரிய மிராசுதாரான குருசாமி ஐயரிடம் குமாஸ்தாவாக இருக்கிறான். அவனுக்கு வந்த சொற்ப வருமானத்தை வைத்துக் கொண்டு சாமர்த்தியமாகக் குடித்தனத்தை நடத்தி வந்தாள் சுசீலா. அவள் புக்ககம் வந்ததும் ஒன்றன்பின் ஒன்றாக மூன்று குழந்தைகள் பிறந்து விட்டன.

பணமுடையினால் அவர்கள் அவஸ்தைப் பட்ட பொழுது ‘வேறு ஊருக்குப் போய் வேலை தேடிக் கொள்ளலாமா’ என்று நடேசன் நினைப்பது உண்டு. ஆனால் அவனுடன் பிறந்த ஆஸ்துமா நோய் அந்த எண்ணத்தை நிராசை ஆக்கிவிடும். மருதூரைத் தவிர வேறு எங்கு போனாலும் அவன் நோய் அதிகமாகி விடும்.

நடேசனின் மூத்த சகோதரியான மரகதம் சென்னையில் வசித்து வந்தாள். சின்னஞ் சிறு வயதிலிருந்து தம்பியிடம் அவள் விசேஷ பிரியம் கொண்டிருந்தாள். நடேசனை விட்டு ஒரு நிமிஷமும் பிரிந்து இருக்கமாட்டாள். அப்பொழுதெல்லாம் தன்னைப் பிரிந்து தம்பி ஊருக்குப் போகும் பொழுது அவள் அடைந்த வேதனை கொஞ்சமா நஞ்சமா! மரகதம் மங்கைப் பருவம் அடைந்து பட்டணத்தில் உள்ள தன் கணவன் வீட்டுக்குச் செல்லும்பொழுதுகூடப் பிரிவாற்றாமை தாங்காமல் அவள் கண்ணீர் வடித்தாள்.

புக்ககம் சென்ற மரகதம் லட்சியக் கணவனை அடைந்து விட்டதாக எண்ணி மனம் பூரித்தாள். இன்பக் கனவுபோல் இரண்டு ஆண்டுகள் சென்றன. அதற்குப் பிறகுதான் அவள் வாழ்க்கையில் ஒரு பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது. ஒரு பெண்ணுக்கு நேரக்கூடாத மகத்தான துர்ப்பாக்கியம் அவளுக்கு நேரிட்டது. இந்த மாபெரும் துயரத்தை நடேசன் அறிந்து துடிதுடித்தான்.

மரகதத்தின் கணவர் கொஞ்சம் பணமும் வீடும் தம் மனைவிக்கு விட்டுப் போயிருந்தார். நடேசன் தன் சகோதரியைக் கிராமத்திற்கு வந்து தன்னுடன் வசிக்கும்படி கேட்டுக் கொண்டான். “என் கணவரின் வீட்டை விட்டு நான் ஒரு நாளும் வரமாட்டேன்!” என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

“அக்கா! இந்த வீட்டிலுள்ள ஒவ்வொரு சாமானைப் பார்க்கும்போதும் எனக்கே அத்திம்பேர் ஞாபகம் வந்து தாங்க முடியாத துக்கம் உண்டாகிறது. நீ இந்த வீட்டில் நிம்மதியாக இருக்க முடியுமா!” என்றான்.

---



பாகவதர்:—காலை நேரத்திற்கு ஏற்ற ராகம் எது?

சிஷ்யன்:—காப்பி!

"நடேசா! இந்த ஊஞ்சலைப் பார்க்கும்போது அவர் அதில் உட்கார்ந்து இப்பொழுதுகூட ஆடுவதுபோல் இருக்கிறது. அதோ அவர் வைத்த அந்த மாமரம் எவ்வளவு செழிப்பாய் வளர்ந்திருக்கிறது, பார்த்தாயா! இவைகளை யெல்லாம் விட்டு விட்டு நான் கிராமத்திற்கு வந்து எப்படி இருக்க முடியும்!" என்றாள் மரகதம்.

மணமிருந்த, குறுகிய மண வாழ்க்கையின் அழியாச் சின்னமாக அந்த சின்னஞ்சிறு பங்களா அமைந்ததை எண்ணிப் பெருமூச்சு விட்டான் நடேசன். அக்காவுக்கு அந்தக் கட்டிடமே உலகம். அதுவே அவள் தாஜ்மஹால்! அந்த வெள்ளை மாடிக் கட்டிடத்தின் ஒவ்வொரு இடத்தையும் எவ்வளவு புனிதமாகப் பாவித்தாள் அவள்!

பல தடவை நடேசன் வற்புறுத்தியதின் பேரில் வருஷத்தில் ஒரு முறை மருதூரில் உள்ள தம்பி வீட்டிற்குச் செல்வாள். ஆனால் ஒரு மாதத்திற்கு மேல் அவள் அங்கு தங்குவதில்லை. அந்த ஒரு மாதம் நடேசனுக்கு எவ்வளவு ஆனந்தத்தையும் பெருமையையும் அளித்ததோ, அவ்வளவு வேதனையையும் ஆத்திரத்தையும் அளித்தது சுசிலாவுக்கு. முதன் முதலில் சுசிலாவும் மரகதமும் சந்தித்ததிலிருந்தே இருவரும் எலியும் பூனையும்போல் ஆகி விட்டனர். நாத்தனார் என்ற உரிமையுடனும் சலுகையுடனும் மரகதம் பேசினாள். வாழ்க்கையில் அவளுக்கு ஏற்பட்டிருந்த கசப்பு அவளைச் சற்று கோபக்காரியாக ஆக்கியிருந்தது. அவள் பேச்சில் குழைவைக் காட்டிலும் வெடுவெடுப்பே அதிகம் இருந்தது. ஆனால் அவள் பேச்சிலுள்ள கடுமைக்குக் காரணம் நடேசனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் பிறர் வீட்டுப் பெண்ணான சுசிலாவுக்குத் தெரியுமா!

அவள் பிறந்த வீட்டுச் செல்லப் பெண். வீட்டுக் காரியங்கள் செய்ய அதிகமாக அறியாதவள். அடிக்கடி பாத்திரங்களைக் கீழே போட்டுக் கொண்டும், கை தவறிச் சாமான்களைக் கீழே கொட்டிக் கொண்டும் இருப்பாள். ஆனால் அதன் காரணம் அதிகப் பழக்கமில்லாத மரகதத்திற்குத் தெரியுமா! ஆகவே அவள் அடிக்கடி கடும் வார்த்தைகளைப் பிரயோகம் செய்வதும் சுசிலா கண்ணைக் கசக்குவதும் வழக்கமாகி விட்டது. ஒவ்வொரு தடவையும் கிராமத்துக்கு வரப்போவதாக மரகதம் எழுதிய போதெல்லாம் பெரும் கிலி அவளைப் பற்றிக் கொள்ளும். போன தடவை மரகதம் வந்திருந்த போது ஏற்பட்ட எதிர்பாராத நெருக்கடியை அவள் எப்படி மறக்க முடியும்!

அப்பொழுது அறுவடை சமயம். மிராசுதார் வீட்டில் இருந்து பொங்கலை முன்னிட்டு நூறு ரூபாய் விசேஷ சன்மானம் வந்தது. "நானும் தான் ரொம்ப நாளாக ஒரு கிளாவர் செயின் வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறேன். இன்னும் ஒரு நூறு ரூபாய் போட்டால் ஒரு கிளாவர் செயின் பண்ணிவிடலாம்" என்று கணவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் சுசிலா. பக்கத்து வீட்டுப் பெண் போட்டுக் கொண்டிருந்த அந்தக் கிளாவர் செயின் அவள் ஆசைக்கு ஒரு தூண்டுகோலாக இருந்தது. "சுசிலா! நான் நூறு ரூபாய்க்கு எங்கே போவேன். அந்தப் பணத்துக்கு வேறு செலவா இல்லை!" என்றான் நடேசன்.

சுசிலா முகத்தில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு உடம்பை வளைத்து நெளித்துக் கொண்டு "உங்கள் அக்கா உங்களுக்கு இந்தச் சமயத்தில் கொஞ்சம் உதவி செய்யக் கூடாதா! அவரிடம் பணம் இருக்கிறது. நீங்கள் ஒரு வார்த்தை அவரைக் கேட்டு வையுங்களேன்" என்றாள். தற்செயலாய் அங்கே வந்த மரகதம் "என்னடாப்பா நாலு நாளாய்ப் பல்லைக் காண்பிக்கிறாளே என்று பார்த்தேன். இதற்குத் தானா! என்னிடம் ஏது பணம்!" என்று கையை விரித்து விட்டாள். முகத்தில் அடித்தது போல் இருந்தது சுசிலாவுக்கு. அவமானத்தாலும் ஆத்திரத்தாலும் நெஞ்சு அடைக்க உள்ளே சென்று விட்டாள். நடேசன் எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவள் கோபம் தணியவில்லை. "என் அப்பாவிடம் சொல்லி, நான் சங்கிலி வாங்கிக் கொள்ளுவேன். அக்காளை ரொம்பவும் தலையில் வைத்துக் கொண்டு கூத்தாடுகிறீர்களே என்று நான் தெரியாத்தனமாய்க் கேட்டுவிட்டேன்" என்று கண்ணீர் விட்டாள்.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு மரகதத்துக்கும் சுசிலாவுக்கும் உள்ள வேற்றுமை அதிகரித்தது. இரண்டு பேரும் வெளிப்படையாகச் சண்டை போட்டுக் கொள்ளவில்லையே தவிர சுசிலாவின் உள்ளத்தில் கோபக் கனல் ஜ்வலித்துக் கொண்டிருந்தது. மரகதம் ஊருக்குப் புறப்பட்ட போது ஆறுதலுடன் கூடிய பெருமூச்செறிந்தாள். இந்த வருஷமும் மரகதம் வரப்போகிறாள் என்று தெரிந்து கொண்டதும் அவள் வேதனை அடைந்ததில் வியப்பில்லையல்லவா!

*

மறுநாள் காலை ஏழு மணி இருக்கும். வாசலில் நின்ற மாட்டு வண்டியிலிருந்து மரகதம் இறங்கினாள். ஏதோ வரவேற்க வேண்டுமென்று சுசிலா அவளை வரவேற்று உபசரித்தாள்.

மரகதம் ஸ்நானம் செய்து கொண்டிருக்கும் போது "ஏண்டி சுசிலா! கிணற்றங்கரையை இவ்வளவு அசுத்தமாகவா வைத்திருப்பது! தோய்க்கும் கல்லை ஏன் அவ்வளவு தூரத்தில் கொண்டு போய்ப் போட்டாய்!" என்று ஆரம்பித்து விட்டாள். ரகசியமாய்ப் பல்லைக் கடித்துக் கொண்டாள் சுசிலா.

சுசிலா, மரகதத்துக்குத் தோசை தயாரித்து வைத்திருந்தாள். அவள் அதைப் பார்த்ததும் "சுசிலா! இந்த மாப் பண்டங்கள் எல்லாம்



அவர் :—இனிமேல் குழாயிலே தண்ணீரைக் குறைத்து விடப்போறாளாம்!

அவள் :—அப்படியா? சீக்கிரம் அதை யாராவது விடச் சொல்லுங்கள்!




எனக்கு ஒத்துக் கொள்ளவில்லை. அரிசி உடைத்து உப்புமா செய்து கொடுக்கிறாயா!'' என்று கேட்டாள் மரகதம். ''இந்தப் பீடுங்கலை இன்னும் எத்தனை நாளைக்குச் சகித்துக் கொள்ளணுமோ!'' என்று பொருமினாள் சுசீலா.

சாப்பிட்டு விட்டு நடேசன் எஜமான் வீட்டிற்குச் சென்றான். என்றுமில்லாத வண்ணம் அன்று சீக்கிரமாகவே திரும்பி வீட்டிற்கு வந்துவிட்டான். அவன் முகத்தில் இருந்த வேதனையைப் பார்த்து ''என்ன விசேஷம்!'' என்று பதறிப் போய்க் கேட்டாள் அவன் மனைவி.

''சுசீலா! நான் கொஞ்சமும் எதிர்பார்க்காதது நடந்து விட்டது. எஜமான் வீட்டில் இனிமேல் எனக்கு வேலையில்லை'' என்றான் அவன். தூக்கி வாரிப் போட்டது சுசீலாவுக்கு.

''ஐயோ இதற்கு என்ன செய்வது! பத்து வருஷங்கள் உழைத்ததற்கு இதுதானா பலன்!'' என்று கையைப் பிசைந்தாள் சுசீலா.

''இத்தனை வருஷம் என்னை அவர் வேலையில் வைத்துக் கொண்டிருந்ததே பெரிது. மூன்று வருஷங்களாக அவர் வயிற்று வலியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாரோ என்னை வேலைக்கு வைத்துக் கொண்டிருந்தாரோ! இல்லாவிட்டால் பத்துபேர் வேலையைக் குருசாமி ஐயரே பார்க்கக் கூடியவர் ஆயிற்றே! ஆமாம் அக்கா எங்கே!'' என்று கேட்டான் நடேசன்.

''அவர் சற்று முன்னால்தான் வெளியே போனார்'' என்றாள் சுசீலா.

''பாவம்! இந்த சமாசாரத்தைக் கேட்டால் அக்காவுக்கு எவ்வளவு மனக் கஷ்டமாக இருக்கும் தெரியுமா!'' என்றான் நடேசன்.

கணவனுக்கு வேலை இல்லையென்று அறிந்ததும் சுசீலாவின் உள்ளம் பதறியது. மூன்று சின்னஞ் சிறு குழந்தைகளை வைத்துக்கொண்டு அந்த ஊரில் எப்படிக் காலம் தள்ளுவது! குருசாமி அய்யரின் பொங்கல் பரிசு இதுதானா! அவள் கணவனுக்கு ஆஸ்துமா நோய் வேறு. வெளியூர் போய் வேலை சம்பாதித்து ஓடி ஆடிக் கஷ்டப்பட முடியுமா! உள்ளூரில்தான் எப்படி வேலை கிடைக்கப் போகிறது! அவள் முகம் சோர்ந்து விட்டது. திடீரென்று அசதியும் வந்து விட்டது.

''சுசீலா! ஏன் இவ்வளவு கவலை! குருசாமி அய்யர் இல்லாவிட்டால் நாம் உயிர் வாழ முடியாதா, என்ன!'' என்று அவள் மனத்தைத் தேற்றினான் நடேசன்.

''வாருங்கள்! சிவன் கோவிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் செய்துவிட்டு வரலாம். மனதுக்கு நிம்மதியாக இருக்கும்'' என்று சுசீலா கூப்பிட்டாள். நடேசனும் சுசீலாவுமாகக் கோவிலுக்குப் புறப்பட்டனர்.

கோவில் பிரகாரத்தைச் சுற்றி வரும்பொழுது மேலப் பிரகாரத்தில் இரு குரல்களைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றனர்.

''மரகதம்! பத்து வருஷங்களாக வேலை பார்க்கிற நடேசனைப் போகச்சொல்லக் கூடாதுதான். ஆனால் நானே பாதி நிலத்தை விற்று விட்டேன். நாலு வருஷங்களாய் வெள்ளம், எலிவெட்டு இப்படியாக விளைச்சலுமில்லை. உன் தம்பியை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது!'' என்றார் குருசாமி அய்யர்.

''என்னமோ நீ செய்வது ஒன்றும் நன்றாக இல்லை'' என்று மரகதம் கூறினாள். அவள் குரலில் மட்டற்ற கோபமும் வேதனையும் இருந்தது. நடேசனும் சுசீலாவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். மரகதமும் குருசாமியும் பால்ய வயதிலிருந்து ஒன்றாக விளையாடியவர்கள். ஆதலால் இருவரும் சகஜமாக பேசிக் கொள்வதுண்டு.

''மரகதம்! உன் தம்பிக்கு வேலை போகாமல் இருக்க வேண்டுமென்றால் அது உன் கையில் தான் இருக்கிறது'' என்றார் குருசாமி.

''என் கையிலா!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் மரகதம்.

''ஆமாம்! நீ சம்மதித்தால் என் யோசனையை மாற்றிக் கொள்ளத் தயார். எனக்கும் தேக அசௌகரியம். பட்டணத்துக்குப் போய் டாக்டர்களைக் கேட்டதில் ஒரு வருஷமாவது அங்கே இருந்து சிரத்தையாக வைத்தியம் பார்த்துக் கொண்டால்தான் உடம்பு குணமாகு மென்று சொல்லுகிறார்கள். மேலும் பேரன் பேத்திகளைப் படிக்க வைக்க வேண்டும். எனக்கும் கிராமத்திலிருந்து அலுத்து விட்டது. பட்டணத்திலேயே

குழந்தைகளுடன் இருந்துவிடலாம் என்று பார்க்கிறேன். ஆனால் பட்டணத்தில் வீடு கிடைப்பதோ குதிரைக் கொம்பாக இருக்கிறது. வீடு கிடைத்தாலும் நம் மனதுக்குப் பிடிக்க வேண்டுமே! என்ன இருந்தாலும் உன் வீட்டைப் போல் ஆகுமா!'' என்றார் குருசாமி.

" நீ சொல்லுவது ஒன்றுமே புரியவில்லையே '' என்றாள் மரகதம்.

"மரகதம், ஏற்கெனவே உன்னைக் கேட்கவேண்டுமென்றிருந்தேன். பட்டணத்தில் உனக்கு ஒரு வீடு இருக்கிறதல்லவா! அதை எனக்குக்கொடுக்கும் பட்சத்தில் நான் பட்டணத்தில் குடித்தனம் வைத்து விடுவேன். உன்னுடைய தம்பியின் வேலைக்கு ஆபத்தும் இல்லை. அவன் எப்பொழுதும் போல் இங்கு இருந்து கொண்டு என் நிலத்தைப் பார்த்துக் கொண்டு இருக்கட்டும். என்ன சொல்கிறாய்!'' என்று கேட்டார் குருசாமி.

'திக்' என்றது நடேசனுக்கு. எவ்வளவு பயங்கரமான வேண்டுகோள்! அக்கா உயிரென மதித்த வீட்டை ஒருவர் விலைக்குக் கேட்பதா! அந்தக் கட்டிடத்தை அக்கா இழப்பாளா! இழக்கத்தான் முடியுமா! சசிலாவின் முகத்தில் அவநம்பிக்கையுடன் கூடிய புன்னகை தோன்றியது. அக்காவாவது, தன் வீட்டை அவருக்கு விலைக்குக் கொடுப்பதாவது!

ஒரு நிமிஷம் நிசப்தம் குடி கொண்டிருந்தது.

" உனக்கு இஷ்டமிருக்காது என்று நான் அப்பொழுதே நினைத்தேன் '' என்றார் குருசாமி.

மரகதம் தொண்டையைக் கனைத்துக் கொண்டு " குருசாமி! என் புருஷன் வைத்துவிட்டுப் போன வீடு எனக்கு அருமைதான். ஆனால் என் தம்பியின் சந்தோஷத்தைவிட எனக்கு முக்கியமானது எது! அவன் வேலையில்லாமல் குழந்தை குட்டிகளுடன் கஷ்டப்படுவதைப் பார்த்து நான் சகிப்பேனா! இந்த ஊரில் இந்த வேலையில் இருந்தால்தான் அவனுக்குச் சௌகரியம் சந்தோஷம் எல்லாம். எனக்கோ வயசு ஆகிவிட்டது. நான் எங்கிருந்தால் என்ன! வீட்டைப் பேஷாக எடுத்துக் கொள்!'' என்று கூறிக் கொண்டே மேலே நடந்தாள். கண கண வென்று கோவில் மணி அடித்தது.

நடேசன் கண்களில் நீர் மல்கியது. பேசவும் சக்தியின்றி ஸ்தம்பித்து நின்று விட்டான். " அக்கா! இந்தத் தியாகத்துக்கு நான் அருகதையா!'' என்று கூறி ஓடிப்போய்ச் சகோதரியின் காலில் விழ நினைத்தான். ஆனால் அவனுக்கு நடக்கவும் சக்தி இல்லை. ஆனால் சசிலாவோ முன்னே ஓடிச் சென்று மரகதத்தின் காலில் சாஷ்டாங்கமாக விழுந்தாள்.

" அக்கா! உங்கள் அன்பும் பெருந்தன்மையும் எங்கே! என் சுயநலமும் அகம்பாவமும் எங்கே! உங்கள் அருமை தெரியாமல் நான் ஏறுமாறாக நடந்து கொண்டு விட்டேன். உங்கள் சொந்த வீட்டைக் கூட விற்று......நீங்கள்......''என்று மேலே சொல்ல முடியாமல் திணறினாள் சசிலா.

" அசடே எழுந்திரு! எனக்கு வேறு யார் இருக்கிறார்கள். எனக்கு எல்லாம் நீங்கள்தானே!'' என்றாள் நாத் தழுதழுக்க.

" போன வருஷம் கிளாவர் மாலைக்குப் பணம் கொடுக்கவில்லை என்று கோபித்தேனே. ஆனால் இந்தப் பொங்கலுக்குப் போன வேலையைத் திரும்பவும் பரிசாகக் கொடுத்திருக்கிறீர்கள். நீங்கள் தான் என் தெய்வம்!'' என்று கூறித் தேம்பினாள் சசிலா. நடேசன் இந்தக் காட்சியைப் பார்த்துப் பிரமித்து நின்று விட்டான்.

---

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



"மிகவும் ஆரோ
க்கியம் வாய்
ந்த பற்களை
உடையவள் நான்
என்று எனது பல்
வைத்தியர் சொல்
லுகிறார். இது மக்
ளீன்ஸுக்கு பெரு
மை தருகிறதல்
லவா?"

உங்கள் பல் பிரஷ்ஷின் மீது மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை அழுக்கிப்படியவையுங்கள். உங்கள் பற்களை சுத்தம் செய்த பிறகு உங்கள் வாயில் உண்டாகும் புது மணத்தையும், சுவையையும் உணருங்கள். மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உடனடியாக வாயில் ஊறும் அபாயகரமான புளிப்பு நீர்களைக் கரைத்து பல் சொத்தை பிடிப்பதைத் தடுத்து விடுகிறது. விகாரமளிக்கும் கறைகளை பற்களிலிருந்து அகற்றுகிறது.

ஆரோக்கியமானவாயும், வெண்மையும் வசீகரமும் கொண்ட பற்களும் வேண்டுமானால் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை தினமும் இரண்டுதடவை உபயோகியுங்கள். அதன் சுத்தத்திற்கு உத்தரவாதம்.




MTY-6 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன்,ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட் மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

# பத்து வருஷங்கள் இளையவராகத் தோன்றினார்



### ஊளைச் சதை குறைந்ததினால்

வயதுக்கு மீறின விருத்தாப்பியத் தோற்ற மளிக்கிறீர்களா? வாழ் நாட்களைப் பெருமூச்சுடன் கழிக் கின்றீர்களா? அவ்வாறாயின், "க்ருஷனால்" வெற்றிகரமாகச் "சுய சிகிச்சை" செய்து கொண்ட இம் மனிதரின் நிருபணத்தைக் கவனி யுங்கள். அவர் கடிதம் வருமாறு:

**"எனது வயது 33, நிறை 206 ராத்தல்; இருந்தும் எனது உயரம் 5 அடி 6 அங்குலம்தான். வயதுக்கு மேற்பட்ட கிழத் தோற்ற முடையவனாயும் இருந்தேன். சுமார் ஐந்து மாதங்களுக்குத் தினந்தோறும் ஒரு சிறிது க்ருஷன் உண்டு, ஒவ்வொரு வாரமும் தேக நிலையில் நல்ல மாறுதலையும் கண்டேன். நான் செய்வது இன்னதென்று உணராத எனது நண்பர்களும் எனது தோற்றத்தில் உண்டான மாறுதலைக் கண்டனர். காலக்கிரமத்தில் எனது ஊளைச் சதையிலிருந்து 35 ராத்தல் இவ்வளவு அனாயாசமாகக் குறைந்தது என்பது ஆச்சரியகரமாக இருந்தது. வயதில் பத்து வருடங்கள் குறைந்த தோற்றத் துடன் உடலமைப்பும் தேறியிருக் கும் தோற்றத்தையும் அளிக்கிறது. வேறு ஒருவித பத்தியமும் இருக்க வில்லை—ப்ரத்யேகமாக உடற் பயிற்சியும் செய்யவில்லை. A. A. D."**

இரத்தத்திலிருந்து ஊறி வரும் விஷப் பொருள்களையும், ஜீரணத் தின் பின்னுள்ள கழிவு பதார்த்தங் களையும் தவறாமலும், சுத்தமாகவும் வெளித் தள்ளுவதற்கு "க்ருஷன்" தேகத்தின் உட்புற அவயவங்களுக்கு உதவுவதன் மூலம் அதிகக் கொழுப் பின் மூல காரணத்தையும் தாக்கு கிறது. கழிவு பதார்த்தங்களும், விஷப் பொருள்களும் உடலில் சேரும் படி விடுவதால் அவை தேகத்தி லுள்ள ரசாயனச் சேர்க்கையால் கொழுப்பாக மாறுகின்றன. நிரந் தரமாகச் சில காலம் க்ருஷன் உட் கொண்டால், அது ஊளைச் சதை யைக் கரைத்து தேகத்தையும் முன்பிருந்தது போலாக்கும்.

இன்றே ஒரு பாட் டில் வாங்குங்கள். எல்லா மருந்துக் கடைகளிலும் வியா பாரிகளிடமும் கிடைக்கும்.




K8ID. 12

# அந்தக் காலி இடம்



உங்கள் தோட்டத்திலோ, முற்றத்திலோ, மாடியிலோ இருக்கும் அந்தக் காலி இடத்தை மறந்து விடாதீர்கள். அது உங்களுக்குத் தேவையான காய்கறிகள் எல்லாவற்றையும் கொடுத்து உங்கள் ரேஷன்களின் பற்றுக்குறையைத் தீர்க்கும். நல்ல மண், விதைகள், போதுமான தண்ணீர் இவை இருந்தால் போதும்; உங்கள் கண்ணெதிரிலேயே உங்கள் உணவு உற்பத்தியாவதைப் பார்க்கலாம்.

அருகிலிருக்கும் நர்ஸரி அல்லது உங்கள் ராஜ்ய விவசாய இலாகாவுக்கு எழுதவும். அவர்கள் உங்களுக்கு மகிழ்ச்சியுடன் உதவியளிப்பார்கள்.

## உணவுக் கட்டுப்பாட்டைச்
## *சமாளிக்கும் வழி*

AC-286TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119. Sladens Gardeu, Poonamallee High Road, Kilpauk, Madras



உங்கள் விருந்தாளிகளை மகிழ்விக்க...

# அதிரசம்






# டால்டாவில் தயாரித்தது

விரும்பத்தக்க ருசிக்கு டால்டா உபயோகியுங்கள். ஊட்டத்தைத் தருகிறது. மேலும் எல்லாவித சமையலுக்கும் உகந்தது. சூடானதோ, குளிர்ந்ததோ, தித்திப்போ, காரமோ எவ்வித பண்டங்களுக்கும் உத்தமமானது. டால்டா கைபடாமல் தயாரித்தது. எப்பொழுதும் புதிதாகவும், அப்புரவாகவும், சீல் செய்த டின்களில் உங்களுக்கு கிடைக்கின்றது.




2 கப் அரிசிமாவுடன், 1 கப் கம்பு மாவு, 3 கப் கொதிக்கும் வெல்லப் பாகு, சில கசகசா விதைகள், பொடிசெய்த சுக்கு இலைகளைச் சேர்த்து, கலந்து, பிசைந்தமாவு தயாரிக்கவும். சிறிய தட்டைகளாகதட்டி வாணலியில் டால்டா விட்டு பொரிக்கவும். டால்டாவை நன்முக வடித்தெடுக்கவும்.

**இதை தவற விடாதீர்கள்!**

புதிய டால்டா சமையல் புத்தகம் —ஆங்கிலத்தில்—பல படங்கள் அடங்கியது—ஆர்ட் காகிதம்—80 பக்கங்கள்—அகில-இந்திய, ஐரோப்பிய தின்பண்டங்கள்—ஆரோக்கியம், சுகாதாரம், சமையலறை இவைகளைப்பற்றிய குறிப்புகள்—விலை ரூ. 1/- தான். தபால் செலவு அணா 8 தனி.



**தி டால்டா அட்வைஸரி ஸர்விஸ்**

தபால்பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 147-172 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*